POST WITHOUT PRE-PAYMENT LICENCE NO. G 6-TN-MS C. P. P. 55 ANNA Leading Progressive Tamil Daily of the People

# புரட்சித்தலைவருக்கு ஜைல்சிங் பாராட்டு

Regd: No. TN-MS (C) 422 Phone: 420212 8 பக்கம் விலை 60 காசு

அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

மலர் 9] சென்னை 10-9-1985 செவ்வாய் வெளியீடு 11-9-1985 புதன் [இதழ் 318

ஈழத்தமிழர்களைக் காக்க இலங்கைமீது மைய அரசு போர் தொடுக்க வேண்டும்

ஈழத் தமிழர் பிரச்சினை குறித்து, நமது கருத்தை ஒன்றுபட்டுக் கூற அனைத்து கட்சியின-ருடன் செல்வோம்!

பிரச்சினை முடிஞ்சுட்டா, அவருக்கு அப்புறம் வாழ்வு கிடையாதே அதான் ஓடுறார்,

## "பால்வளத்திட்டத்தை சிறப்பாக செயல்படுத்துகிறார்"

உதகமண்டலம், செப். 10- தமிழகத்தில் பால் வளர்ச்சிக்கான பல்வேறு திட்டங்களை முதல்வர் புரட்சித்தலைவர் சிறந்த முறையில் செயல்படுத்தி தமிழக மக்களின் பொருளாதாரத்தை மேம்பாடடையச் செய்து வருகிறார் என்று ஜனாதிபதி ஜைல்சிங் பாராட்டுத் தெரிவித்தார்.

நீலகிரி மாவட்டம் உதக மண்டலத்தில் ரூபாய் 3 கோடியே 50 லட்சம் செலவில் அமைக்கப்பட்டுள்ள பால் பண்ணையை ஜனாதிபதி ஜைல்சிங் இன்று திறந்து வைத்தார்.

அவர் பேசுகையில் கூறியதாவது:-

அரசியலில் நாம் விடுதலை பெற்றிருந்தாலும், பொருளாதாரத்தில் நமது மக்கள் போதிய முன்னேற்றம் இன்னும் அடையவில்லை.

கடந்த 20 ஆண்டுகளில் பால் உற்பத்தியில் நாடு முன்னேற்றம் அடைந்துள்ளது. பால் உற்பத்தி 3 மடங்காக அதிகரித்துள்ளது.

தமிழகத்தில் பால் உற்பத்தி சிறந்து விளங்குகிறது. வெண்மைப புரட்சிக்கு முதலமைச்சர் எம் ஜி. ஆர். பல்வேறு சீரியதிட்டங்களைத்தீட்டி தமிழகத்தில் செயல் படுததி வருகிறார். எம்ஜி ஆர் ஆட்சியில் தமிழகததில் பால் வளம் சிறந்து விளங்குகிறது ஏழை எளிய மக்கள் பொருளாதாரததில் ஏற்றம் அடைவதறகான பால் உற்பத்தி திட்டங்களை செயல் படுத்தி வரும் தமிழக அரசு பல்வேறு மாநிலங்களுக்கும் இன்று முன்னோடியாக இருக்கிறது. அதறகாக முதலமைச்சரையும் பால்வளததுறை அமைச்சர் கே. ஏ. கிருஷ்ணசாமியையும் நான் பாராட்டுகிறேன்.

இந்தியாவிலேயே சுற்றுலாதலங்களில் உதக மண்டலம் ஒரு முககியமான இடமாக இருந்து வருகிறது. இயற்கை அழகு பூத்துக் குலுங்கும் இந்தப் பகுதியையும், இதன் சுறறுப்புற பகுதிகளையும் மேலும் வளப்படுத்தி பேணிக் காக்க வேண்டும். இங்குள்ள மக்கள் பேசும் மொழி எனக்குத் தெரியாது. ஆனால் அன்பையும், பணபையும அவர்கள் தங்களுடைய கண்களிலேயேகாட்டி என்னை பரவசமாக்குகிறார்கள் தமிழகமக்கள் விழியால் பேசி என் இதயத்துக்குள் நிறைந்துவிட்டார்கள்.

இவ்வாறு ஜனாதிபதி ஜைல்சிங் பேசினார்.

விழாவுக்கு ஆளுநர் எஸ் எல் குரானா தலைமை வகித்தார். பால் வளர்ச்சித்துறை அமைச்சர் கே. ஏ. கே. கலந்து கொண்டு பேசுகையில் கூறியதாவது:

வெண்மைப்புரட்சியில் தமிழகம் மேன்மேலும் முன்னேறிக் கொண்டிருக்கிறது

இந்தப் பால்பண்ணையில் நாள்தோறும் 50 ஆயிரம் லிட்டர் பால் பதப்படுத்தப்படும். பாலாடை, பால்கட்டி. மற்றும் பல்வேறு பால் பொருள்களும் தயாரிக்கப்பட விருக்கின்றன.

பால்பண்ணை தமிழகத்தில் அதிகரிததுக்கொண்டிருப்பதை தொடர்ந்து வேலைவாய்ப்பும் பெருகி வருகிறது.

பால் உறபத்திக்கேற்றபடி நிரந்தர மார்க்கெட் கிடைக்கும் வகையில் பிரதமர் ராஜீவின் ஒத்துழைப்புடன் உயர் ஜாதி பசுக்களை உற்பத்தி செய்யவிருக்கிறோம. அக்டோபர் மாதம் இந்த திட்டம் துவங்க இருக்கிறது.

இவ்வாறு அமைச்சர் கே. ஏ. கே. கூறினார்.

## கோட்டையில் முதல்வர் ஆலோசனை

சென்னை, செப். 10— முதல்வர் புரட்சித்தலைவர் இன்று கோட்டையில் அமைச்சர்கள். அதிகாரிகளுடன் ஆலோசனை நடத்தினார்.

அமைச்சர்கள் பண்ருட்டி ராமச்சந்திரன், ப. உ. ச. பொன்னையன் டாக்டர் அண்டே திருநாவுக்கரசு ஆகியோரும் உள்ளாட்சித் துறை உயர் அதிகாரிகளும் ஆலோசனையில் கலந்து கொண்டனர்.

கூட்டம் முடிவில் அமைச்சர் ப. உ. ச. கூறியதாவது!

முதல்வர் புரட்சித் தலைவரை, எதிர்க்கட்சித் தலைவர் உ. சுப்பிரமணியம் பழனியாண்டி, என். ராமசாமி உடையார் ஆகியோர் சந்தித்து. "பஞ்சாயத்து தேர்தலைகட்சி அடிப்படையில் நடத்தவேண்டும் என்றும் அதற்காகத் தேர்தலை தள்ளி வைக்க வேண்டும் என்றும் கேட்டனர். அது பற்றி பரிசீலிக்கப்பட்டது.

உள்ளாட்சித் தேர்தல் பற்றிய அறிவிப்பு வாபஸ் ஆக வில்லை. அது அப்படியே உள்ளது.

இவ்வாறு அமைச்சர் ப. உ. ச. கூறினார்.

## அன்பழகன்: 5 நாள் சிறை தண்டனையுடன் விடுதலை

சென்னை, செப். 10— போலீஸ் தடை உத்தரவை மீறி ரயிலை நிறுத்தச்சென்றதாக கைது செய்யப்பட்ட தி மு க. பொதுச்செயலாளர் அன்பழகன் கலாநிதி எம். பி. ஆகியோருக்கு கலா 5 நாள் சிறைத்தண்டனை விதிக்கப்பட்டது. எழும்பூர் கூடுதல் மெட்ரோ பாலிடன்மாஜிஸ்திரேட் முருகேசன் வழக்கை விசாரித்து தீர்ப்பளித்தார்.

ஏற்கனவே அவர்கள் 10 நாட்கள் சிறையில் இருந்திருப்பதால், தண்டனை காலம் முடிவுற்று உடனடியாக அவர்கள் விடுதலை செய்யப்பட்டனர்.

## கழக எம்.எல்.ஏ. முருகன் மறைவுக்கு முதல்வர் புரட்சி தலைவர் இரங்கல்

சென்னை, செப் 10— செய்யாறு தொகுதி கழக எம். எல். ஏ. முருகன் மறைவுக்கு முதல்வர் புரட்சித்தலைவர் இரங்கல் தெரிவித்தார். முதல்வர் சார்பில் கழக பொதுச்செயலாளர் எஸ். இராகவானந்தம் சென்று முருகன் உடல் மீது மலர் வளையம் வைத்து அஞ்சலி செலுத்தினர்.

வட ஆற்காடு மாவட்டம் செய்யாறு தொகுதி கழக எம்.எல் ஏ. கே. முருகனுக்கு மாரடைப்பு ஏற்பட்டது.

காஞ்சிபுரம் அரசு மருத்துவமனையில் அவரைச் சேர்த்தார்கள். தீவிர சிகிச்சை அளித்தும் பயனின்றி அவர் இயற்கை எய்தினார்.

அவருடைய உடல் சொந்த ஊரான செய்யாறுக்கு எடுத்துச்செல்லப்பட்டது. இதற்கான ஏற்பாடுகளை செங்கல்பட்டு மாவட்ட எம் ஜி. ஆர். மன்ற செயலாளர் காஞ்சி பன்னீர் செல்வமும் மற்றும் கழகத் தோழர்களும் செய்தனர்.

### முதல்வர் வேதனை

முருகன் எம் எல் ஏ மறைவுச் செய்தி கேட்டு முதல்வர் புரட்சித் தலைவர் வேதனை அடைந்தார். தமது சார்பில் முருகனுக்கு அஞ்சலி செலுத்தவும், அவரது குடும்பத்தினருக்கு ஆறுதல் கூறவும் கழக பொதுச் செயலாளர் எஸ். இராகவானந்தத்தை முதல்வர் புரட்சித்தலைவர் அனுப்பி வைத்தார்.

அதன்படி பொதுச் செயலாளர் இராகவானந்தம் செய்யாறுக்குச் சென்று, முருகன் உடல்மீது மலர் வளையம் வைத்து அஞ்சலி செலுத்தினார்.

அவரது குடும்பத்தினருக்கு ஆறுதல் கூறினார்.

கே. முருகனுக்கு மனைவியும் 3 மகன்களும், ஒரு மகளும் உள்ளனர்.

கடந்த தேர்தலில் செய்யாறு தொகுதியில் பதிவான ஓட்டுகள் வருமாறு!

கே. முருகன் (கழகம்) 53,945

பாபு ஜனார்த்தனன் (தி. மு. க.) 37,405

ஏகாம்பர ஆச்சாரி (சுயேச்சை) 527

விழிவேந்தன் (சுயேச்சை) 405

செல்லாத ஓட்டுகள் 5215.

## சபாநாயகர் பி. எச். பாண்டியன் வெளிநாடு செல்கிறார்

காமன்வெல்த் நாடாளுமன்ற மாநாட்டில் கலந்து கொள்வதற்காக, சபாநாயகர் பி. எச். பாண்டியன் வெளிநாடு செல்கிறார்,

இந்த மாநாடு கனடா நாட்டில் நடைபெறுகிறது. இம்மாதம் 13ந் தேதி சென்னையிலிருந்து அவர் பம்பாய் செல்கிறார். அங்கிருந்து கெய்ரோ, நியூயார்க் பபலோ, ஆர்லாண்டோ, லாஸ்வேகா சான் பிரான்சிஸ்கோ, வாங்கூட்வர், ஆகிய நாடுகளுக்கு சென்றுவிட்டு ரெஜினா செல்கிறார் அங்கிருந்து சாக்கார்டூன் என்ற இடத்தில் மாநாடு நடக்கும் இடத்திற்கு செல்கிறார்.

அடுத்த மாதம் 2ந் தேதி முதல் 11ந் தேதிவரை இந்த மாநாடு நடைபெறுகிறது. இந்த மாநாட்டில் சபாநாயகர் பி. எச் பாண்டியன் இரண்டு பேப்பர்களை தாக்கல் செய்கிறார்.

இந்தியாவிலிருந்து மொத்தம் 8. பிரதிநிதிகள் மாநாட்டில் பங்கு பெறுகிறார்கள். இவர்களில் 5பேர் எம். பி. க்கள் மற்றவர்கள் சபாநாயகர்கள்

63 நாடுகளைச் சேர்ந்த 200 பிரதிநிதிகள் இந்த மாநாட்டில் கலந்து கொள்கிறார்கள் இந்தியாவிலிருந்து செல்லும் குழுவுக்கு பல்ராம் ஜாக்கர் தலைமை வகிக்கிறார்

இந்த மாநாட்டிலும், மற்ற நாடுகளிலும் நாடாளுமன்றங்கள் எப்படிச் செயல் படுகின்றன என்பதை கண்டறியப் போவதாக சபாநாயகர் பி. எச். பாண்டியன் நிருபர்களிடம் தெரிவித்தார்.

இந்த மாநாடு முடிந்த பிறகு, நியூயார்க், லண்டன், பாரீஸ், ஜெனீவா, பிராங்க்பர்ட், ரோம். வழியாக நவம்பர் 5ந்தேதி பம்பாய் வந்து சென்னை வந்தடைகிறார்

தமிழக சட்டசபை சார்பில், பெட்டிஷன் கமிட்டி என்று புதிதாக ஒன்று அமைக்கப்படுகிறதென்று சபாநாயகர் பி. எச். பாண்டியன் நிருபர்களிடம் தெரிவித்தார்.

பொது மக்களுக்கும் சட்டமன்றத்திற்கும் நெருங்கிய தொடர்பு இருக்க வேண்டும் என்பதற்காக இந்தக் கமிட்டி அமைக்கப்படுகிறது. பொதுவான பிரச்சினைகள் குறித்து. புகார் மனுவை பொதுமக்கள் சபாநாயகரிடமோ அல்லது இந்தக் கமிட்டியிடமோ கொடுக்கலாம்.

கமிட்டியில் 11 உறுப்பினர்கள் இருப்பார்கள். அமைச்சர்கள் யாரும் கமிட்டியில் இருக்கமாட்டார்கள்.

பொதுமக்கள் தந்தி அல்லது கடிதம் மூலம் புகார்களை அனுப்பலாம். அதன் மீது விசாரணை செய்து மேற்கொண்டு நடவடிக்கைக்கு அரசுக்கு அனுப்பும்.

இவ்வாறு சபாநாயகர் பி. எச். பாண்டியன் கூறினார்

## 17 தனியார் மருத்துவக் கல்லூரிகள் திறக்க அனுமதியா? அரசு மறுப்பு

சென்னை, செப். 10— தனியார் துறையில் 17 மருத்துவக் கல்லூரிகள் திறக்கப்பட இருப்பதாக பரப்பப்பட்டுள்ள வதந்தியை அரசு தலைமைச் செயலாளர் டி. வி. அந்தோணி மறுத்தார்.

அரசு தலைமைச் செயலாளர் டி. வி அந்தோணி அரசு சார்பில் வெளியிட்டுள்ள அறிக்கை வருமாறு:-

17 மருத்துவக் கல்லூரிகளை தனியார் துறையில் திறப்பதற்கு அரசு கருதிக் கொண்டிருக்கிறது என்ற ஒரு வதந்தி பரவலாக உள்ளது.

தற்போது அரசு 3 தனியார் மருத்துவ கல்லூரிகளை திறக்க அனுமதி அளித்துள்ளது.

### அரசு பரிசீலனை

இந்த மூன்று கல்லூரிகள் செயல்படும் முறையை அரசு நன்றாகப் பரிசீலனை செய்யும்.

இந்தப் பரிசீலனைக்குப் பிறகுதான் வேறு எந்த விதமான முடிவும் எடுக்கப்படும் என்று அரசு அறிவிக்க விரும்புகிறது.

எனவே மேலும் 17 புதிய மருத்துவக் கல்லூரிகளை தனியார்துறையில் திறக்க அனுமதி அளிக்க அரசு கருதிக் கொண்டிருக்கிறது என்ற வதந்தி சரியானதல்ல.

இவ்வாறு அரசு தலைமை செயலாளர் டி. வி. அந்தோணி அறிவித்துள்ளார்.

## தாய்லாந்தில் ராணுவ புரட்சி முறியடிப்பு

பாங்காக், செப். 10— தாய்லாந்து நாட்டில் கடந்த ஞாயிற்றுக்கிழமை நடந்த ராணுவப்புரட்சி முறியடிக்கப்பட்டது. முன்னாள் ராணுவத் தளபதி தலைமையில் நடந்த புரட்சியை ஆட்சியின் ஆதரவாளர் மற்றும் விசுவாசப் படையினர் முறியடித்தனர்.

புரட்சிப் படையினர் விசுவாசப் படையினரிடம் சரண் அடைந்தனர் என்றும் தெரிவிக்கப்பட்டது.

புரட்சிப் படையினர் ஒடுக்கப்பட்டு விட்டதாக அறிவிக்கப்பட்டு விட்டாலும் தாய்லாந்தில் உள்நாட்டு குழப்பம் ஏற்பட்டுள்ளதாக கூறப்படுகிறது. விசுவாசப் படையினரும் எதிர்ப்பாளர்களும் ஒருவரைஒருவர் தாக்கிக்கொள்ளும் சம்பவங்கள் நடக்கின்றன என்றும் சில செய்திகள் கூறுகின்றன,

## ஜெயலலிதாவுக்கு ராசாராம், அண்டே, விஜயலட்சுமி வாழ்த்து

சென்னை, செப். 10— கழகக் கொள்கைபரப்புச் செயலாளராகப்பொறுப்பு ஏற்றுள்ள, செல்வி ஜெயலலிதாவிற்கு அமைச்சர்கள் ராசாராம், அண்டே ஆகியோர் தொலை பேசி மூலம் வாழ்த்துத் தெரிவித்தனர்.

கழக கொள்கை பரப்பு செயலாளர் செல்வி ஜெயலலிதாவை அமைச்சர் விஜயலட்சுமி பழனிசாமி அவரது இல்லத்தில் சந்தித்து வாழ்த்துக் கூறினார்.

செல்வி ஜெயலலிதாவை நாடாளுமன்ற உறுப்பினர் சவுந்தரராசன் சட்டமன்ற உறுப்பினர் அந்தியூர் மாதய்யன் குத்தாலம் பாப்பா சுப்பிரமணியம் ஊருந்தூர்பேட்டை ஆனந்தன் கண்டமங்கலம் சுப்பிரமணியம் சீர்காழி பாலசுப்பிரமணியம் மேலவை உறுப்பினர்கள் கோலப்பா மாசிலாமணி கவிஞர் முத்து லிங்கம் அங்கமுத்து ஆகியோரும் சந்தித்து வாழ்த்துக் கூறினார்கள்.

குத்தாலம் சுப்பிரமணியத்துடன் 21 ஒன்றிய செயலாளர்களும் வந்திருந்து செல்வி ஜெயலலிதாவுக்கு வாழ்த்து கூறினர்.

துணை சபாநாயகர் வி. பி. பாலசுப்பிரமணியம், சட்டமன்ற அரசு கொறடா துரை கோவிந்தராசன் சட்டமன்ற உறுப்பினர்கள் பொள்ளாச்சி ரத்தினம், பல்லடம் பி. என். பரமசிவம் ஆகியோர் ஜெயலலிதாவிற்கு மாலைகள் அளித்து வாழ்த்துக் கூறினர்.

மற்றும் ஏராளமான கழக தொண்டர்கள் மாலைகள் அளித்து வாழ்த்தைதெரிவித்தனர்.

## தலைகுப்புற பஸ் "பல்டி"

சென்னை, செப். 10— ஆந்திர மாநிலம் குண்டூரிலிருந்து தமிழகம் வந்த சுற்றுலா பஸ் ஒன்று சென்னைக்கருகே தலைகுப்புற கவிழ்ந்ததில் 7பேர் காயமடைந்துள்ளனர். காயமடைந்தவர்கள் சென்னை பொது மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டுள்ளனர்,

## இலட்சிய பூமி

எனது இலட்சிய பூமி எல்லோரும் இன்புற்று வாழும் பூமி. ஒருவரை ஒருவர் சுரண்டாமல் எல்லோருக்குமாக நான் என்ற முறையில் சமுதாயம் அமைக்கப்பட வேண்டும்.

—பேறிஞர் அண்ணா

## வாலிபப் பருவம்

வாலிபப் பருவம் அபாயகரமானபருவம். சுலபத்தில் நெருப்புப் பற்றிக் கொள்ளக்கூடிய பொருளைப் போல்மிக பத்திரமாகக் காப்பாற்றப்பட வேண்டிய பருவம்.

—தந்தை பெரியார்

# பஞ்சாப் தேர்தல்: மாவட்டத்துக்கு ஒரு பார்வையாளர்

புதுடெல்லி, செப். 10- பஞ்சாப் மாநிலத்தில தேர்தலைக் கண்காணிப்பதற்காக மாவட்டத்துக்கு ஒரு பார்வையாளரை தேர்தல் கமிஷன் நியமித்தது.

பஞ்சாப் மாநிலத்தில் வரும் 25ந் தேதி சட்டசபைக்கும், நாடாளுமன்றத்திற்கும் தேர்தல நடக்கிறது.

தேர்தலைக் கண்காணிப்பதற்காக 12 பார்வையாளர்களை தேர்தல் கமிஷன் நியமித்து உள்ளது.

மத்திய அரசின் இணைச் செயலாளர்களாக உள்ள இந்த அதிகாரிகள் தேர்தல் நடப்பதற்கு 4 நாட்களுக்கு முன்பிருந்து 1ந்தேதிமுதல் பார்வையாளர்களாகஇருப்பார்கள் மாவட்டத்துக்குஒருவராக நியமிக்கப்படும்இந்த பார்வையாளர்கள் தேர்தல் கமிஷனின் கண்களாகவும் காதுகளாகவும் இருப்பார்கள் என்று தேர்தல் துணைக் கமிஷனர் ராமகிருஷ்ணன் நிருபர்களிடம்தெரிவித்தார்

இவர்கள் தவிர மாநில அதிகாரிகளிலிருந்து 26 பேரும்பார்வையாளர்களாக நியமிக்கப்பட்டுள்ளார்கள் என்றும்ராமகிருஷ்ணன்தெரிவித்துள்ளார்.

# சென்னை பூங்கா நகர்: கமிஷனர் ஷீலா மக்கள் குறை கேட்டார்

சென்னை, செப். 10— சென்னை மாநகராட்சி ஆணையர் ஷீலா நாயர் பூங்கா நகர் தொகுதியில் பல்வேறு பகுதிகளுக்கு சென்று மக்களின் குறைகளை கேட்டறிந்தார்,

அவருடன் பொறியாளர், சுகாதாரத்துறை அதிகாரிகள் ஆகியோரும் சென்றனர்.

கழகத்தின்வட்டச்செயலாளர் ஜி. எஸ். பாபு, சம்பத் எம். தியாகராஜன் ஆகியோரும் கமிஷனருடன் சென்றனர்.

# இலங்கை பிரச்சினை: பிரதமருடன் ஈழதமிழ் தலைவர்கள் பேச்சு

புதுடெல்லி, செப். 10— இலங்கை ராணுவம் தமிழர்களை கொன்றுகுவித்து வருவது பற்றி இந்தியா ஆத்திரம் அடைந்துள்ளது. தமிழ் ஈழ விடுதலை இயக்கத்தினர் இன்னும் ஓரிரு நாட்களில் புதுடெல்லியில் பிரதமர் ராஜீவை சந்தித்துப் பேசுகிறார்கள்.

போர் நிறுத்த ஒப்பந்தத்தையும் மீறி இலங்கையில் ராணுவமும் சிங்கள வெறியர்களும் தமிழர்களை சுட்டுத் தள்ளுகிறார்கள்.

தமிழர்களின் வீடுகள் தீ வைத்துக் கொளுத்தப்படுகின்றன. தமிழ் ஈழ விடுதலை இயக்கத்தினரும் இலங்கை ராணுவத்துக்கு பதிலடிகொடுத்து வருகிறார்கள்.

வடக்கு கிழக்கு பிராந்தியங்களில் தமிழர்களின் சொத்துக்கள் மீண்டும்சூறையாடப்படுகின்றன.

இலங்கையில் இப்படி தமிழர்கள் படுகொலை செய்யப்படுவது குறித்துஇந்தியா ஆத்திரம் அடைந்துள்ளது.

இலங்கைப் பிரச்சினையை விரைவில் தீர்ப்பதற்கு இந்தியா மிகுந்த அக்கறையுடன் தீவிர நடவடிக்கைகளை எடுத்து வரும் போது இப்படி இலங்கை ராணுவம் தமிழர்களை சுட்டுக் கொல்வது பிரச்சனையை மேலும் சிக்கலாக்கிவிடும் என்றும் இந்தியா கண்டனம் தெரிவித்துள்ளது.

இலங்கையின் போக்கு இந்திய அதிகாரிகளை ஆத்திரமூட்டும் வகையில் அமைந்துள்ளது. போர் நிறுத்த ஒப்பந்தமும் இன்னும் சில நாட்களில் காலாவதி ஆக விருக்கிறது. அதற்குள் தமிழர் பிரச்சினையை தீர்த்து வைப்பதில் இந்தியா மிகுந்த அக்கறை கொண்டுள்ளது.

இலங்கை தமிழர் பிரச்சினை பற்றி மீண்டும் பேச்சுவார்த்தை நடைபெற இருக்கிறது. மூன்றாவது சுற்றுப் பேச்சு வார்த்தை நடப்பதற்கு முன்பு தமிழ் ஈழ விடுதலை இயக்கத்தினருடன் பிரதமர் ராஜீவ்காந்தி பேச்சுநடத்தவிருக்கிறார்.

### பிரதமருடன் சந்திப்பு

இன்னும் ஓரிரு நாட்களில் தமிழ் ஈழவிடுதலை இயக்கத்தைச் சேர்ந்த தலைவர்கள் பிரதமர் ராஜீவை சந்தித்து பேசவிருக்கிறார்கள். இந்தச் சந்திப்பு புதுடெல்லியில் நடைபெறும். இந்தியா தயாரித்துள்ள புதிய திட்டம் பற்றி தமிழர் விடுதலை இயக்கத்தினர் ஒருபக்கமும், இலங்கை அரசு மற்றொரு பக்கமும் ஆலோசனை செய்து வருகிறது.

பிரதமர் ராஜீவ்காந்தியை தமிழ் ஈழத்தலைவர்கள் சந்தித்துப் பேசும் போது இந்தப் புதிய திட்டம் பற்றி அவர்கள் பேசுவார்கள்,

தமிழ்ஈழ விடுதலை இயக்கத்தினர் விரைவில் பிரதமர் ராஜீவை சந்தித்து பேசுவது இரு தரப்பினருக்குமே நன்மைபயக்கும் என்று அரசியல் வட்டாரங்கள் கருத்து தெரிவித்துள்ளன.

தேவைப்பட்டால் வெளி விவகார செயலாளர் ரமேஷ் பண்டாரியை சென்னைக்கு அனுப்புவது என்றும் பிரதமர் திட்டமிட்டுள்ளார்.

ரமேஷ் பண்டாரிசென்னையில் இலங்கைத் தமிழர் விடுதலை இயக்கத்தலைவர்களை சந்தித்துப்பேசுவார். பின்னர் விடுதலை இயக்கத்தினர் பிரதமர் ராஜீவை சந்திப்பார்கள்.

# ஆரணி ஒன்றிய கிளைக்கழக செயலாளர்கள் கூட்டம்

ஆரணி, செப். 10— மற்கு ஆரணி ஒன்றிய கிளைக்கழக செயலாளர்கள் பிரதிநிதிகள் கூட்டம் வரும் 14-ந் தேதி காலை சுப்பிரமணிய சாஸ்திரியார் மேல்நிலைப் பள்ளியில் மோசனவேலு தலைமையில் நடைபெறுகிறது.

இக்கூட்டத்தில் நாடாளுமன்ற உறுப்பினர் ஏ.சி. சண்முகம் சட்டமன்ற உறுப்பினர்சின்னக்குழந்தை பொன்னையன் மற்றும்பலர கலந்து கொள்கின்றனர்.



# முதல்வர் புரட்சித்தலைவர் தலைமையில் அமைச்சர் விஜயலட்சுமி தங்கை திருமணம்

சென்னை, செப், 10— அமைச்சர் விஜயலட்சுமி பழனிசாமியின் தங்கை திருமணம்முதல்வர்புரட்சித் தலைவர் தலைமையில் சென்னையில் நடைபெறுகிறது.

தமிழக அமைச்சர் விஜயலட்சுமி பழனிசாமியின் தங்கை ப.சாந்தாவிற்கும், சேலம் மாவட்டம் மல்லூர் வேங்காம்பட்டி பொன்னுசாமி கவுண்டரின் மகன் பி.குணசேகரனுக்கும் வரும் 16ந் தேதி திங்கட்கிழமை காலைகலைவாணர் அரங்கில்நடைபெறுகிறது.

முதல்வர் புரட்சித்தலைவர் இத்திருமணத்தை நடத்தி வைக்கிறார்.

இத்திருமணத்தில் கழகப் பொதுச் செயலாளர், அமைச்சர்கள், வாரியத் தலைவர்கள், தலைமைக் கழக நிர்வாகிகள் நாடாளுமன்ற சட்டமன்ற மேலவை, பேரவை உறுப்பினர்கள் கழக முன்னணியினர் ஆகியோர் கலந்து கொண்டு மணமக்களை வாழ்த்துகின்னர்.

# முதல்வர் முயற்சி வெற்றி: சென்னை டி.வி.யில் 2 வது அலைவரிசை ஒளிபரப்பு

சென்னை, செப் 10— சென்னை டெலிவிஷன் நிலையத்தில் 2வது அலை வரிசை ஒளிபரப்பு வரும் டிசம்பர் மாதத்தில் இருந்து துவக்கப்படும்.

சென்னையில் தற்போது ஒரு அலை வரிசையில்தான் நிகழ்ச்சிகள் ஒளிபரப்பப் பட்டுவருகின்றன வண்ண ஒளிபரப்பபும் இடம் பெறவிருக்கிறது.

சென்னை தொலைகாட்சி நிலையத்தில் மற்றும் ஒரு அலை வரிசையில் நிகழ்ச்சிகள் ஒளிபரப்பப்பட வேண்டும் என்றும் வண்ணத்தில் காட்சிகளை பட்டமாக்க வெளிப்புற ஒளிபரப்புவான் அதற்கான அனைத்துயந்திர சாதனங்களுடன் அமைக்கப்படவேண்டும் என்றும் முதல்வர் புரட்சித்தலைவர் மத்திய அரசுக்குகோரிக்கை விடுத்திருந்தார்,

இதுகுறித்துபலமுறைஅவர் மத்திய செய்தி ஒலிபரப்புத்துறை அமைச்சருக்கும் கடிதம் எழுதியிருந்தார்.

அமைச்சர் ஆர். எம். வீ. யும் இதுபற்றி வலியுறுத்தி வந்தார்.

இதைத் தொடர்ந்துஇந்த ஆண்டு டிசம்பர் மாதத்தில் சென்னை டெலிவிஷன் நிலையம் 2வது அலை வரிசையில் தனதுஒளிபரப்பு நிகழ்ச்சிகளை துவங்கவிருக்கிறது.

சென்னை வந்துள்ளடெலிவிஷன் டைரக்டர் ஜெனரல் ஹரிஷ்கன்னா நேற்று நிருபர்களிடம் பேசுகையில் இத்தகவலைத் தெரிவித்தார்.

தற்போது கறுப்பு வெள்ளையில் மட்டுமே நிகழ்ச்சிகள் ஒளிபரப்பப் பட்டு வருகின்றன. அதற்கென்று தனிப்பட்ட ஸ்டுடியோவும் அமைக்கப்பட்டுள்ளது.

இப்போது வண்ண நிகழ்ச்சிகளுக்கென்று தனியாக ஒரு ஸ்டுடியோவும் சென்னை நிலையத்தில் ஏற்படுத்தப்பட்டு வருகிறது. அதற்கான வேலைகள் கடந்த வாரமே துவங்கிவிட்டன. சென்னைக்கென்று வெளிப்புற ஒளிபரப்பு வான் ஒன்றும் "வெளிநாடுகளில் இருந்து இறக்குமதி செய்யப்படவிருக்கிறது. டெலிவிஷனுக்கான அனைத்து யந்திர சாதனங்களும் இந்த 'வானில்' அமைக்கப்பட்டு இருக்கும்.

இவ்வாறு ஹரிஷ்கன்னா கூறினார்.

# தேர்தல் மூலமே ஜனநாயகம் ஏற்படும்: பிரதமர் ராஜீவ் பேச்சு

புதுடெல்லி, செப் 10— பயங்கரவாதப் பிரச்சினைக்கு ஜனநாயக முறைகள் மூலமும் மக்கள் பிரதிநிதிகளைக் கொண்ட ஒரு அரசை அமைப்பதன் மூலமே தீர்வு காண முடியும்என்று பிரதமர் ராஜீவ் காந்தி தெரிவித்தார்.

இந்தியா முழுதுமிருந்தும் வந்திருந்த ஆங்கிலம் மற்றும் வட்டார மொழி நாளிதழ்களின் ஆசிரியர்கள் கூட்டத்தில் பிரதமர் ராஜீவ் காந்தி உரையாற்றினார்,

அக்கூட்டத்தில் பிரதமர் ராஜீவ்காந்தி பேசுகையில் கூறியதாவது,

பஞ்சாபில் இந்திரா காங்கிரஸ் தீவிரமாகப் போட்டியிடும். தேர்தலில் வெற்றி பெற்று இந்திரா காங்கிரஸ் ஆட்சிக்கு வந்தால் அங்கு திறமையாக அரசு அமைக்க முடியும்.

### முழு பாதுகாப்பு

தேர்தலில் போட்டியிடும் சுமார் 900 வேட்பாளர்களுக்கு முழுப்பாதுகாப்பு அளிக்கும் பணிமிகக கடினமானதாகும். எனவே தான் தேர்தல் சட்டத்தைத் திருத்த முடிவு செய்யப்பட்டது. அரசியல் கட்சிகளின் வேட்பாளர்களுக்கு அதிக பட்ச பாதுகாப்பு அளிக்க அரசு முன்வரும்.

பாகிஸ்தான் பகுதியில் பயங்கரவாதிகளுக்குப் பயிற்சி அளிக்கப்படுவதாக அரசுக்கு உறுதியான தகவல் கிடைத்துள்ளது. எனவே தான் எல்லைப்பகுதி மூடப்பட்டிருக்கிறது.

மக்கள் பிரதிநிதித்துவ (தேர்தல்) சட்டத்தை திருத்தியிருப்பதை ஆதரிக்கிறேன். பயங்கரவாத பிரச்சினைக்கு ஜனநாயக முறைகள் மூலமும் மக்கள் பிரதிநிதிகளைக் கொண்ட ஒரு அரசை அமைப்பதன் மூலமே தீர்வு காண முடியும்

இவ்வாறு பிரதமர் ராஜீவ் காந்தி கூறினார்.

# முட்டை வீண்செலவே

புதுடெல்லி, செப். 10— முட்டை பற்றி ஆராய்ச்சி நடந்தது. 70 பைசா முட்டையில் கிடைக்கக் கூடிய புரதச்சத்து 15 பைசா பொரிக்கடலையிலோ, மொச்சை பயிரிலோ கிடைக்கிறது. எனவே முட்டை அதிக விலையில் குறைந்த பலன் தரும் ஒரு பொருளாக இருக்கிறது என்று நிபுணர்கள் கண்டு பிடித்துள்ளனர்.

இதுமட்டுமல்லகொலஸ்ட்ரால் வியாதி உள்ளவர்கள் முட்டை அறவே சேர்க்க கூடாது.

கொலஸ்ட்ரால் உள்ளவர்கள் முட்டைஉண்பது அதிக அளவு இதய நோய் உருவாக காரணமாக இருக்கிறது என்றும் விஞ்ஞானிகள் கண்டு பிடித்துள்ளனர்.

# ஏழைகள் நலன் கருதி திட்டங்கள் தீட்டும் புரட்சித்தலைவர்

## அமைச்சர் ஹண்டே பெருமிதம்

தர்மபுரி, செப். 10— ஏழைகளின் நலனை எண்ணிய புரட்சித் தலைவர் திட்டங்களைத் தீட்டுகிறார் என்று அமைச்சர் ஹண்டே பெருமிதத்துடன் கூறினார்.

தர்மபுரி அரசினர் மருத்துவமனையில் 16 லட்சம் ரூபாய் செலவில் 150 படுக்கைகள் கொண்ட தீவிர இருதய சிகிச்சை பிரிவு கட்டிடமும் 6 படுக்கைகள் கொண்ட சூரா ரங்கையச் செட்டியார் குடும்பத்தார் கட்டிக் கொடுத்த 'சீ பிரிவையும் அமைச்சர் ஹண்டே திறந்து வைத்தார்.

அவர் கூறியதாவது!

தர்மபுரி மருத்துவ மனையில் 1977க்கு முன் 50 படுக்கைகளே இருந்தன. இன்று 386 படுக்கைகள் உள்ளன புரட்சித் தலைவர் ஆட்சியில்தான் ஏழைகளுக்கு இதுபோன்ற பல திட்டங்கள் செயல்படுத்தப்பட்டு வருகின்றன.

புரட்சித்தலைவர் ஏழைகளுக்காக திட்டம் தீட்டி செயல்படுவதால், ஏழைகளுக்கு நன்மை பயக்கும் வகையில் மருத்துவ வசதியை அதிகப்படுத்தியுள்ளார்.

இவ்வாறு ஹண்டே பேசினார்.

விழாவிற்கு பாராளுமன்ற துணை சபாநாயகர் தம்பிதுரை தலைமை வகித்தார், மாவட்ட கலெக்டர் ஆர். பாலகிருஷ்ணன் முன்னிலை வகித்தார். மாவட்ட மருத்துவ அதிகாரி சாந்தாம்மாள் விழாவிற்கு வந்திருந்த அனைவரையும் வரவேற்றார். பால்வளத் தலைவர் சட்டமன்ற உறுப்பினர் அரங்கநாதன், முன்னாள் சட்டமன்ற உறுப்பினர், காவேரிப்பட்டினம் டாக்டர். கோசமரசம் மற்றும் தம்பி வெங்கடாசலம் உள்ளிட்ட பலர் கலந்து கொண்டனர். கணேசன் நன்றி கூறினார்.



## ஏலவிற்பனை

1. MangalChand&Co, 87, A.P.Road, Madras-112 (1—8—79 முதல் 30.6.84 வரை) ஏலத்தேதி 30-8-85 அன்று பகல் பத்து மணிக்கு இருந்தது 13-9-85 அன்று மதியம் 12 மணிக்கு மாற்றப் பட்டுள்ளது.

2. R, Gisibai, 33, Village Road, Nungambakkam Madaras-34. (1—1—80 முதல் 28.2.84 வரை) ஏலத்தேதி 17-9-85 அன்று பகல் 10 மணிக்கும்

3. Nemichand Jain 19, Krishnappa Mudali St, Purasawahkkam High Road, Ms-94 (1—1—80 முதல் 30—4—84 வரை) ஏலத்தேதி 17-9—85 அன்று மதியம் 11 மணிக்கும்,

4. Moolchand Sethia, IPE Koil st Ayanavaram, Ms—23 (1—1—80 முதல் 30—3—84 வரை) ஏலத்தேதி 17—9—85 அன்று மதியம் 1 மணிக்கும்,

5. R. Shanthilal Jain 119 Papermills Road Peravalore Madars-82 (1-4 82 முதல் 31-5-84 வரை) ஏலத்தேதி 17-9-85 அன்று மதியம் 2 மணிக்கும்,

6. OmPrakash Chowdhary 24 E.H. Road Salimanagar Madras-39 (1-10-82 முதல் 31-7-84 வரை) ஏலத்தேதி 17-9-85 அன்று மதியம் 3-மணிக்கும்,

7. D. KamalaBai 55 S. R. P. Koil St. JawaharNagar Madras-82 (1-2-81முதல் 30-6-84வரை) ஏலத் தேதி 19-9-85 அன்று காலை 10 மணிக்கும்,

8) S. Subaschand Jain, 1,IBlock, M.M.D.Coleny, Ms 106 (1-10.83 முதல் 30-6-84 வரை) ஏலத்தேதி 19-9-85 அன்று மதியம் 11 மணிக்கும்,

9. M. Uttamchard Jain 2, North Mada St, Nungambakkam, Ms 34 (1-1-80 முதல் 28-2-84 வரை) ஏலத்தேதி 19-9-85 அன்று மதியம் 1 மணிக்கும்.

10. L. Madanlal, 67-B, Eastmada St, V Ilivakkam, Ms-49 (1-1-79 முதல் 31-5-84 வரை) ஏலத்தேதி 19-9-85 அன்று மதியம் 3 மணிக்கும்.

11. S. Devaraj Jain, 57, S. R.P. Koil St, Jawahar Nagar Ms-82 (1-1-81 முதல் 30-6-84 வரை ஏலத்தேதி 19-9-85 அன்று மாலை 4 மணிக்கும்.

12. B. Dulichand Jain, 17, Velayutha Chettyst. Purupet Madras-2 (1-3-79 முதல் 31-7-84 வரை ஏலத்தேதி 20-9-85 அன்று பகல் 10 மணிக்கும்,

13 S.Premabai, 29/6, PapermillsRoad, peravallore Madras 82 (1-2-83 முதல் 31 3 84 வரை) ஏலத்தேதி 20-9-85 அன்று பகல் 11 மணிக்கும்,

14. Dhagalaram Choudhry 127, Dr Besant Road Royapet, Madras-14. (1-5-80 முதல் 31-5-84 வரை) ஏலத்தேதி 20 9.85 அன்றுமதியம் 12மணிக்கும்'

15 Rikab Chand Mahaveer Chand Chopra 21 S.P.R Koil Street Madras 82 (1-1-80 முதல் 31-1-82 வரை) ஏலத்தேதி 20 9 82 அன்று மதியம் 3 மணிக்கும்,

16 R. Paratapmal Sowcar 165, Strahans Road Ms 12 (1-11-80 முதல் 31-1-82 வரை) ஏலத்தேதி 20 9.85 அன்று மாலை 4 மணிக்கும்,

17. Harakchand Jain, 153 Pulianthope High RoadMS 12 (1-8 80முதல் 30-6 84 வரை) ஏலத்தேதி 13-9-75 அன்று பகல் 12 மணிக்கும்.

18. Babula SugamChand 21.v.k. Nagar IInd St, Madras-12 (1-3-80 முதல் 30-6-84வரை) ஏலத்தேதி 23-9 85 அன்று மதியம் 2 மணிக்கும்.

19, R.Sampathraj, 5r, T.V. Puram 1St Street, Choolimadu, Madras-94 (1.9.83 முதல் 30.6.84 வரை) ஏலத்தேதி 33.9,85 அன்று மாலை 4 மணிக்கும்,

20. Sundardai, 65,P.M. Road Perambur, Madras-11 (1.1.81 முதல் 30.9.84 வரை) ஏலத்தேதி 24.9.85 அன்று காலை 10மணிக்கும்,

21) M Shobhagvamal Jain, 181, K H Road Aynavaram, Ms-23 (1-10-80 முதல் 31-12 83 வரை) ஏலத்தேதி 24-9 85 அன்று மதியம் 12 மணிக்கும்

22) G Suganraj Kotha 33, Krishnadoss RoadMs12 (1 7-79 முதல் 30-11-84 வரை) ஏலத்தேதி 24-9-85 அன்று மாலை 4 மணிக்கும்,

23 Gothi&Co TankBond Road, Nungamgbakam, Madras-34 (1.9.81 முதல் 30.7.84 வரை) ஏலத்தேதி 25 9,85 அன்று காலை 10 மணிக்கும்

24 Hemarajheeralal 66, East Mada St, VilliVakkam Madras-49 (1-5-80 முதல் 31 10-83 வரை) ஏலத்தேதி 25-9-85 அன்று மதியம் 12 மணிக்கும்.

25 KtK, Sharama62S ivan koil St, Kodambakkam, Madras-24 (1-1-83 முதல் 31,7-84 வரை) ஏலத்தேதி 25-9-85 அன்று மதியம் 3 மணிக்கும்

26 P. M. Jain 78 Tana Steet, Madras-7 (1-1 80 முதல் 30.4.84) ஏலத்தேதி 27.9.85 அன்று மதியம் 1 மணிக்கும்.

27. K. Madanlal Jain, 90 Greenways Road, Narayanaswamy Garden, Madras—28 (1—1—80 முதல் 30—6—84 வரை) ஏலத்தேதி 27 9-85 அன்று பகல் 10 மணிக்கும்,

28. J. M. Joshi, 39, Annaneclum Fathai CholaiMedu Madras—94 (1.11.83 முதல் 31—7—84 வரை) ஏலத்தேதி 23,9.85 அன்று மதியம் 3 மணிக்கும்

மேற்படி யார் கடைகளில் அடகு வைத்துள்ள பொன்-பொன் அல்லாத பொருட்களை வருவாய்த்துறை அதிகாரிகள் முன்பு அரசு அங்கீகாரம்பெற்ற ஏலகாரர் M "கரம்சந்த்ஜெயின்,' 150 சச்சிதானந்தம் தெரு, சென்னை—12ல் மாவட்ட ஆட்சியாளரின் உத்தரவுப்படி மேற்குறிப்பிட்டுள்ள ஏலத்தேதிகளில் ஏலம் போடுவார்

## ஏல விற்பனை

1) சோனிபாய் 56, அம்மையப்ப முதலி தெரு. சென்னை—14 (20—1—80 முதல் 20—8—82 முடிய) ஏலத்தேதி 20—9—85

2) ஏ. கிசுலால்&சன்ஸ், 125, பி எச். ரோடு, சென்னை—107 (1—1—80 முதல் 30—6—84 முடிய) ஏலத்தேதி 20—9—85

3) கிசுலால் சுபாஸ்சந்த் ஜெயின், 125. பி. எச். தெரு சென்னை—107 (1—1—84 முதல் 30-6-84 முடிய) ஏலத்தேதி 20-9;85

4) கிசுலால்தீப்சந்த் 1, முதலாவது தெரு, ஜே. புரம் சென்னை—31 (1—1—84 முதல் 4—7—84 முடிய) ஏலத்தேதி 20,9.85

5. தேவிபாய் 1,முதலாவது தெரு, சுஜபுரம் சென்னை—31 (1,1,80 முதல் 4.4.83 முடிய) ஏலத்தேதி 20,9,83

6. எச். எஸ். கர்னாவட், 62, ஆர்.கே. மட ரோடு சென்னை— 28 (25,8.79 முதல் 15.6.84முடிய) ஏலத்தேதி 23.9.85

7. எம்.கௌதம் சந்த் ஜெயின், 82,கௌடியா மட் ரோடு சென்னை— 14. (15.8.81 முதல் 31.5.84 முடிய) ஏலத்தேதி 23.9.85

8 ஏ. சம்பாலால் ஜெயின் 104, பஜார் ரோடு. சென்னை 14 (5.5.80 முதல் 31.3.84 முடிய) ஏலத்தேதி 23.9.85

9 கமலாபாய் 9, ஆள்வார்பெட், சென்னை — 18 (1—2—81முதல் 30—6—84 முடிய)ஏலத்தேதி23—9—85

10 சீ. மனக்சந்த் 139, வால்டாக்ஸ் ரோடு. சென்னை — 3 15—4—80 முதல் 30—7—84 முடிய) ஏலத்தேதி 23—9—85

11 ஜே. தி. லோக் சந்த் ஜெயின் 34, நாராயணப்ப நாய்க்கன் தெரு. சென்னை 21 (20—11—79 முதல் 16—6—84 முடியா ஏலத்தேதி 23—9—85

12. ஜி.பிரகாஷ்சந்த்&கோ 22, கலாமண்டபம் ரோடு. சென்னை—13, (25.1.81 முதல் 30.6 84 முடிய) ஏலத்தேதி 24.9.85

13. எச்.அன்ராஜ்ஜெயின் 16, காரணீஸ்வரர் கோவில் தெரு. சென்னை—4. (24—12—81 முதல் 15—6—84 முடிய ஏலத்தேதி 24—9—85.

14.எஸ்பி ஜெயின்,8, கலவ செட்டித் தெரு. சென்னை—2 (20—4—80 முதல் 31—12—83 முடிய) ஏலத்தேதி 24—9—85

15- லோஹன் ராஜ். கௌதப்சந்த். 6, சிமிட்ரி ரோடு, சென்னை—1, 25—10—79 முதல் 30—3—83 முடிய) ஏலத்தேதி 24—9—85

16) ரிகாப் சந்த் ஜெயின், 178, சூளைமேடுஹைரோடு சென்னை-94 (15-3-84 முதல் 2-7-84 முடிய) ஏலத்தேதி 24 9-85

மேற்படி கடைகளில் அடகு வைத்து மீட்கப்படாத பொருட்கள் மேற்படி தேதிகளில் காலை 10 மணிக்கு மேல் வருவாய்த்துறை அதிகாரிகள் முன்னிலையில் அரசு ஏல தாரர்களான எம். ஜவஹர்லால் போரா அவர்களால் 60, சாமிபண்டாரம் தெரு, சிந்தாதரிப்பேட்டை சென்னை 2 எனும் அவர்களின் பழைய விலாசத்திற்கு பதிலாக புதிய விலாசமான 31, மங்கபதி நாய்க்கன் தெரு, சிந்தாதரிப்பேட்டை சென்னை-2 விலாசத்தில் ஏலம் போடப்படும்.

## ஏலவிற்பனை

1. P. Mahaveer Chand 14, Market st. Aynavaram Madras-23 (1-1 80) முதல் 31-5-84 வரை) ஏலத்தேதி 17.9.85 அன்று பகல் 10 மணிக்கும்.

2. Seshodiya 8 6. P,3 rd Aveneu Ashok Nagar Madras-83 (1-12-81 முதல் 31-10-83 வரை) ஏலத்தேதி 17-9-85 அன்று மதியம் 11 மணிக்கும்.

3, Mohanlalrathore, 109 M.T.H. Road Villivakkam Madras-49 (1.12.81 முதல் 31 12 83 வரை) ஏலத் தேதி 17 9 85 அன்று மதியம் 12 மணிக்கும்.

4. Shishodayas Co., 46.B.E. Coloney, Ist street Choolaimedu, Madras-94. (1-1-80 முதல் 30-11-83 வரை) ஏலத் தேதி 17-9 85 அன்று மாலை 4 மணிக்கும்,

5, Manakchand Chan Raj Jain, 249, purasawalkkam HighRoad, Madras-7 (1-5-76 முதல் 31-12-83 வரை) ஏலத் தேதி 19-9-85 அன்று பகல் 10 மணிக்கும்,

6, S, Indarmal Jain, 90, L.B. Road, Adayar, Madras 20. (1-1-80 முதல் 31-7-84 வரை) ஏலத் தேதி 20-9-85 அன்று காலை 10 மணிக்கும்

7) S. Sohanlal Jain, 50, Thambiah Reddy Road, west Mambalam Ms 33 (1-1-80 முதல் 31-7-84 வரை) ஏலத்தேதி 20-9-85 அன்று காலை 11 மணிக்கும்

8) J. Mittalal Jain, 196 Ranganathapuram Indra Nagar, Ms-20 (1-1-80 முதல் 31 5-84 வரை ஏலத்தேதி 20-9-85 அன்று மதியம் 1 மணிக்கும்

9) B. Jethmal Jain, 171 B StrahansRoad Ms 12 (1-1-80 முதல் 31-7 84 வரை) ஏலத்தேதி 20.9.85 அன்று மதியம் 2 மணிக்கும்

10) S.D.Chhdjer, S. A. Vankai St, Thiruvanmiur, Ms-41 (1-1-80 முதல் 30-6-84 வரை ஏலத்தேதி 20-9-85 அன்று மதியம் 2 மணிக்கும்.

11. K, Rangara 29 p.T. H,Road Madras12 (1-1-80 முதல் 30,6.84 வரை) ஏலத் தேதி 23.9 85 அன்றுகாலை 10.மணிக்கும்,

12. M.Desar Singh Jain 9. pulianthope High Road Madras 12 (1.8.81 முதல் 30.6,84 வரை) ஏலத் தேதி 2 .9.85 அன்று காலை 11 மணிக்கும்.

13. p. Vimalchand Jain 49, Vellala St, Aynavaram madras 23 (1.1 80 முதல் 30.1.84 வரை) ஏலத்தேதி 23.9 85 அன்று மதியம் 12.மணிக்கும்,

14. m.Bengali Babu Jain 35,Decater Road p. T, H. Road madras 12 (1.7.80 முதல் 30.6.84 வரை) ஏலத் தேதி 23,9.85 அன்று மதியம் 1.மணிக்கும்,

15. S. Bhawarlal, 53 M. T H. Road, Madras-49 (1-11-81 முதல் 28-2 84 வரை) ஏலத் தேதி 24-9 85 அன்று காலை 10 மணிக்கும்

16. Inderchand B. Jain 105, N. Block. M.M.D.A. Colany Arumbakkam, Ms-106) (1-6-82 முதல் 30-6-84 வரை ஏலத்தேதி 24-9-85 அன்று காலை 11 மணிக்கும்.

17. Virlakawar jain, 881, K. H. Road. Aynavaram, Madras-23 (1-1-80 முதல் 31—5—85 வரை) ஏலத்தேதி24—9—85 அன்று மதியம் 2 மணிக்கும்.

18 8. Richabchand Jain 61, P.M Road. Perambur, Madras (1 (1-1-80 முதல் 31.7,84 வரை) ஏலத்தேதி 24.9.85 அன்று மதியம் 2 மணிக்கும்

19 S. Mohanlal, 114, Venkat rangampillai St, Triplicane, Madras-5 1.6.82 முதல்31.5.84) ஏலத்தேதி 24.9.85 அன்று மதியம் 3மணிக்கும்.

20 Jeevaraj Panralal, Bohara 52, Sundara mudali St,Vysarpadi,ms-39(1 9 79 முதல் 30-6-82 வரை) ஏலத் தேதி 25-9 85 அன்று மதியம்1-2 மணிக்கும்

21. A Bhawarlal Jain 33 Baliamman Koil street VillivakkamMs-49(1 11-80 முதல் 31-3 84 வரை) ஏலத் தேதி 25-9-85 அன்று மதியம் 1 மணிக்கும்,

22. Bafna & Co 111 South Mada St. Villivakkam Madras-49 (1-1-80 முதல் 30 12 82 வரை) ஏலத் தேதி 27 9 85 அன்று மதியம் 12 மணிக்கும்

23. P. C. Bafna, 112 South mada Villivakkam Madras 49 (1 1 80 முதல் 31 8 83 வரை ஏலத்தேதி 27 9 85 அன்று மதியம் 1 மணிக்கும்,

24. M/S Go echha & co, 1 Srinivasa Avenue R. A. Puram Madras-28 (1 4 79 முதல் 30 12 83 வரை) ஏலத்தேதி 27 9 85 அன்று மதியம் 1 மணிக்கும்.

25, C.Nathmaljain, 79 Ragvacharist, Perambor Madras-11 (1-1-81 முதல் 30-3-84 வரை) ஏலத்தேதி 30.9.85 அன்று மாலை 4 மணிக்கும்,

26 H.AsgaramChoudhry 36 vanniar st. Choolimedu Madras-9 (1-2-84 முதல் 31-7-84 வரை) ஏலத்தேதி 30-9-85 அன்றுகாலை 11 மணிக்கும்,

மேற்படி யார் கடைகளில் அடகு வைத்துள்ள பொன்-பொன் அல்லாத பொருட்கள் வருவாய்த் துறை அதிகாரிகள் முன்பு அரசு அங்கீகாரம் பெற்ற ஏலதாரர் 1. கரம்சந்த்ஜெயின், 150, சச்சிதானந்த தெரு, சென்னை 1.ல் மாவட்ட ஆட்சியாளரின் உத்திரவுப்படி மேற்குறிப்பிட்டுள்ள ஏலத்தேதிகளில் ஏலம் போடுவார்,

---

## மருத்துவப் பணி குடும்பநலத்துறை டெண்டர் நோட்டீஸ்

தமிழ்நாடு ஆளுநருக்காக அவரது சார்பில் 50/60 MA 100 MA/200 MA X-rayயூனிட்டுகள் சப்ளைக்கு சீலிட்ட டெண்டர்கள் 30— —85 பிற்பகல் 3 மணி வரை டைரக்டர் ஆப் மெடிக்கல் சர்வீஸஸ் அண்ட் பேமிலி வெல்ஃபர் அவர்களால் வரவேற்கப்படுகின்றன.

டெண்டர் பத்திரங்கள். நிபந்தனைகள் அடங்கிய டெண்டர் குறிப்புக்கள் இதர குறிப்புகள் 12—9—85க்குப் பிறகு டைரக்டர் ஆப் மெடிக்கல் சர்வீஸஸ் அண்ட் பமிலி வெல்ஃபர், சென்னை—6 அவர்களிடம் ரூபாய் 10.45 (பத்து ரூபாய் நாற்பத்தைந்து காசு மட்டும்) செலுத்திப் பெற்றுக் கொள்ளலாம். இதில் விற்பனை வரி, விற்பனை வரியில் சர்சார்ஜ் ஆகியவையும் அடங்கும். டெண்டர் பத்திரத்துக்கான கட்டணத்தை S SCடன் சேர்த்து இரண்டு சலான்கள் மூலம் ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியா, ஆயிரம் விளக்கு கிளை, சென்னை—6 அவர்களுக்கோ அல்லது அரசின் ஏதாவது ஒருகஜானாவிற்கோ செலுத்த வண்டும்.

டெண்டர் பாரத்துக்கு பத்து ரூபாயை கீழ்க்கண்ட கணக்கில்,080 "மெடிக்கல்—A, அலோபதி G. அதர் ரெசிப்ட்டுகள்— 07. அதர் அயிட்டம்ஸ். D.M.S & F.W. (ii)அதர் ரெசிப்ட்டுகள்- D.P.கோடு நம்பர் 080. A. AGAA. 0725."

விற்பனை வரிக்காக 0.45 பைசாவை கீழ்க்கண்ட கணக்கில்

'0.40. P.S.T— ரெசிப்ட் அண்டர் S.T.ஆக்ட்— 05 (1)— ஜெனரல் S T.D,P, கோட் நம்பர் 040A ABAA 0518'

அல்லது

டைரக்டர் ஆப் மெடிக்கல் சர்வீஸஸ், அண்ட் பேமிலி வெல்ஃபர் சென்னை—6 அவர்கள் பெயருக்குஸ்டேட் பாங்க் ஆப் இந்தியா, அயிரம்விளக்கு கிளை சென்னை—6ல் செலுத்தத்தக்க ரூ. 10.45ஐக்கான டிமாண்ட் டிராப்ட்டாக அனுப்பலாம் ஒரிஜனல் சலான்கள் அல்லது டிமாண்ட் டிராப்ட் அடங்கிய விண்ணப்பங்கள் டைரக்டர் ஆப் மெடிக்கல் சர்வீஸஸ் அண்ட் பேமிலி வெல்ஃபர் சென்னை—6 அவர்களுக்கு டெண்டர்பாரங்கள் சப்ளை செய்வதற்காகசமர்ப்பிக்கப்படவேண்டும்.

குறிப்பு:- தபாலில் டெண்டர் பாரங்கள் பெற்றுக் கொள்ள விரும்புவோர் டெண்டர்களை பெற்றுக் கொள்வதற்கு ஐந்து நாட்களுக்கு முன்னதாகவே விண்ணப்பிக்க வேண்டும். அந்தத்தொகைஎக்காரணம் கொண்டும் திருப்பித் தர தக்கதல்ல.

சீலிட்ட டெண்டர்கள் 30.9.85 அன்று பிற்பகல் 3.00 மணி வரை பெற்றுகொள்ளப்படும். 30.9.85 பிற்பகல் 3.00 மணிக்கு டைரக்டர் ஆப் மெடிக்கல் சர்வீஸஸ் அண்ட் பேமிலி வெல்ஃபர், சென்னை 6 அவர்களுடைய அலுவலகத்தில் ஆஜராகியிருக்கிற டெண்டர்தாரர்கள் முன்னிலையில் திறக்கப்பட்டு ரேட்டுகளும் அவர்களுக்கு படித்துச சொல்லப்படும்.

இயக்குனர்

சென்னை-600 006

DIPR-37472/85- /MAC

---

ரூ. 20 லட்சம் பரிசு

தமிழக பரிசுசீட்டு புத்தாண்டு சிறப்பு குலுக்கலில், ஊட்டியைச் சேர்ந்த காட்டு இலாகா அதிகாரி பி அகஸ்டீனுககு ரூபாய் 20 லட்சம் பரிசு கிடைத்தது. அந்தத தொகைக்கான செக்கை, அகஸ்டீனிடம் நீலகிரி மாவட்ட கலெக்டர் என். பி.குப்தா வழங்கியபோது எடுத்த படம்.

# அமைச்சர் ஆர். எம். வீ.க்கு ராசாராம், பாண்டியன் வாழ்த்து

சென்னை, செப். 10— அமைச்சர் ஆர் எம் வீ பிறந்தநாளையொட்டி அவருக்கு அமைச்சர் ராசாராம் சபாநாயகர் பி எச் பாண்டியன் ஆகியோர் வாழ்த்தினர்.

அமைச்சர் ஆர். எம். வீ யின் 60வது பிறந்தநாளை யொட்டி நேற்று அவருக்கு கலைவாணர் அரங்கில் சிறப்பான விழா கொண்டாடப்பட்டது.

விழாவில் சபாநாயகர் பி.எச். பாண்டியன், அமைச்சர்கள், வாரியத் தலைவர்கள், மற்றும் முத்தமிழ் காவலர் கி. ஆ. பெ விஸ்வநாதம் திருமுருககிருபானந்தவாரியார், குன்றக்குடி அடிகளார் டாக்டர் அறம், இயக்குநர் பாரதிராஜா மற்றும் பல சமயப் பெரியோர்களும், நாடாளுமன்ற, கழக உறுப்பினர்களும், சட்டமன்றமேலவை, பேரவை உறுப்பினர்களும், மற்றும் பல கழக முன்னணியினரும் கலந்து கொண்டனர்,

தொழில் துறை அமைச்சர் க, ராசாராம் தலைமை வகித்தார்.

அப்போது அவர் கூறியதாவது:-

அமைச்சர் ஆர்.எம்,வீ யின் 60வது பிறந்தநாள் விழாவில் கலந்துகொண்டு தலைமை யுரையாற்றுவதில் பெருமகிழ்ச்சி கொள்கின்றேன்.

அறநிலையத்துறை என்றாலே நம் நினைவில் தோன்றுவது ஆர். எம். வீ. தான்.

தான் எடுத்துக்கொண்ட பணி முடிவடைய வேண்டும் என்பதில் அவர் காட்டும் ஆர்வமே தனி.

திராவிட பாரம்பரியத்தில் வளர்ந்தவராதலால் கொண்ட கொள்கையை விட்டு கொஞ்சமும் மாறாதவர்.

எத்தனையோ பாழடைந்த கோவில்களுக்கு கும்பாபிஷேகம் செய்ய ஏற்பாடு செய்தவர்.

பல கோவில்களை புதுப்பித்து, தமிழகத்து இளைஞர்களை, மக்களை ஆன்மீகப் பாதையில்வழி நடத்திச் செல்பவர்.

ஸ்ரீரங்கம்கோவில் கோபுர கும்பாபிஷேகத்திற்காகசிரமமெடுத்து தமிழக அரசு சார்பில் அதிக நிதி ஒதுக்கீடு செய்ய சொல்லி பணிகளை தீவிரமாக முடுக்கி விட்டுள்ளார்.

அறநிலையத்துறை தற்போது மறுமலர்ச்சி அடைந்துள்ளது என்றால் அதற்கு பொறுப்பானவர் ஆர்.எம். வீ. தான்

அடுத்து அவர் ஏற்றுள்ளது சுற்றுலா துறை.

இப்போது காஷ்மீர்முதல் கன்னியாகுமரி வரை சுற்றுலா ஸ்தலங்கள் பல உள்ளன.

ஏற்காட்டில் பல லட்ச ரூபாய் செலவில் இளைஞர் விடுதியும், குமரியில் பல லட்ச ரூபாய் செலவில் இளைஞர் விடுதியும் புதிதாக கட்டப்பட்டுள்ளன.

சுற்றுலா வரும் பயணிகள் உல்லாசமாகத் தங்கி, ஓய்வெடுக்கவும், பொழுது போக்கவும் கலையரங்கங்கள் பல கட்டிக்கொடுத்து அதற்கான ஏற்பாடுகளை செய்தவர் ஆர்.எம்.வீதான்

7 ரூபாய்செலவில்படுக்கையுடன் தங்க இளைஞர் இல்லங்கள் வழி செய்கிறது.

இன்னும் எத்தனையோ திட்டங்கள் வகுக்கப்பட்டு, பணிகள் தீவிரமாகசெம்மையாக நடைபெற்று வருகின்றன.

அவர் எடுத்த பணியில் தனக்கென்று தனி முத்திரை பதித்து தனிச் சிறப்புடன் செய்து முடிப்பவர்.

வெளிநாட்டு சுற்றுலா பயணிகளின் கவனத்தை ஈர்க்கும் வகையில், எழில் சொட்டும் இடங்களாக தமிழ்நாட்டின் பல்வேறு பகுதிகளை மாற்றி வருகின்றார்.

இப்படிஎண்ணற்றசேவைகளை செய்யும் அமைச்சர் ஆர். எம், வீ. அவர்கள் மேலும் பல ஆண்டுகள் வாழ்ந்து சமயத்துக்கும், மக்களுக்கும் அரும்பணியாற்றிடும் வண்ணம் திடமாக இருந்து செயல்பட வேண்டுகின்றேன்.

இவ்வாறு அமைச்சர் ராசாராம் பேசினார்.

### சபாநாயகர்

சபாநாயகர் பி. எச். பாண்டியன் பேசுகையில் கூறியதாவது:—

'வாழ்த்துவதற்கு வயது தேவை" என்று இங்கு பலரால் சொல்லப்பட்டது. இருப்பினும் வாழ்த்து பெறுபவர், என்னோடு 1972 லிருந்து தோளோடு தோள் கொடுத்து நின்றவர்.

அந்த 13 வருட நட்பில், உள்ள ஆழத்தின் அடிப்படையில், அவர் பல்லாண்டு வாழ்க' என சட்டப் பேரவை சார்பில் வாழ்த்துகின்றேன்.

இவரிடம் எனக்கு பிடித்ததெல்லாம்; மனதில் உள்ளதை மனதில் தோன்றுவதை கொஞ்சமும் சங்கோஜமில்லாமல் அப்படியே கொட்டிவிடும் குணம்தான்.

ஏதாவது ஒரு பிரச்சினை என்றால் சற்று சிந்தித்துவிட்டு "ஆணித்தரமான ஆலோசனை"களை உடனே வழங்குபவர்தான் அமைச்சர் ஆர், எம். வீ.

இப்படிப்பட்ட நல்ல குணமுடைய ஒரு மாபெரும் மனிதர் பல்லாண்டு வாழ்ந்து கட்சிக்கும் ஆட்சிக்கும், சமயத்திற்கும் அறத்திற்கும் தொண்டு செய்யுமாறு கேட்டுக் கொள்கிறேன்.

இவ்வாறு சபாநாயகர் பி.எச். பாண்டியன் பேசினார்.

### பொன்னாடை

மேலவைகொறடா ஜேப்பியார் எம்.எல்.சி. வாழ்த்திப் பேசினார்.

வலம்புரிஜான் எம். பி. எழுதிய 'ஆர்.எம்.வீ. ஓர் ஆலயம்' என்ற நூலை கிருபானந்தவாரியார்வெளியிட, தொழிலதிபர் மகாலிங்கம் பெற்றுக் கொண்டார்.

டாக்டர் அமிர்தலிங்கம் எழுதிய "அண்ணா வழியில் ஆர்.எம்.வீ. என்ற நூலை குன்றக்குடி அடிகளார் வெளியிட, சபாநாயகர் பி.எச். பாண்டியன் பெற்று கொண்டார்.

விழாக்குழுசாரிபில்குன்றக்குடி அடிகளார்; அமைச்சர் ஆர். எம், வீக்கு பொன்னாடை போர்த்தினார்.

விழாவில், வலம்புரிஜான் எம்.பி., கி.ஆ.பெ. விசுவநாதம், கிருபானந்வாரியார் டாக்டர்ஔவைநடராசன், டாக்டர் அறம், ஊரன் அடிகள் சிங்கார வடிவேலு ஆகியோர் பேசினர்.

விழா முடிவில் சட்டமன்ற உறுப்பினர் சைதை துரைசாமி நன்றி கூறினார்.

# உலக சமாதானம்: தமிழகத்தில் பாதயாத்திரை

சென்னை, செப். 10— இந்திய-சோவியத் கலாச்சார மையத்தின் தமிழ் நாடுகிளையும், அகிலஇந்திய சமாதான கழகமும் இணைந்து தமிழக அளவிலான பாத யாத்திரை ஒன்றை நடத்த இருக்கிறது.

இதில்ஆயிரத்திற்குமேற்பட்டவர்கள் கலந்து கொள்வார்கள் எனத் தெரிகிறது.

அதன் முதல் கட்ட நடை பயணம் கன்னியாகுமரியிலிருந்து நாளை 11—ந் தேதி தொடங்க இருக்கிறது சுப்ரீம் கோர்ட்டின் முன்னாள் தலைமை நீதிபதி, ஆர். கிருஷ்ணய்யர் இந்த நடைபயணத்தை துவக்கி வைப்பார்.

இரண்டாவது கட்ட நடை பயணம் பொள்ளாச்சியில் வரும் 17-ந் தேதி துவங்குகிறது.

இந்த பாத யாத்திரை பவனி வரும்போது, கொடிகளையும், உலக அமைதிக்கு வித்திடும் வண்ணம் எழுதப்பட்ட, வண்ண எழுத்துக்கள் பொறித்த அட்டைகளையும் ஏந்தி வருவார்கள்.

அப்போது ஒருமைப்பாட்டை வலியுறுத்தும் சுலோகங்களும் இசையுடன் கலந்த பாடல்களையும் ஒலிபரப்பியவாறு ஊர்வலம் நகர்ந்து வரும்.

நடுநடுவே சமாதானம் ஒற்றுமை. ஒமைப்பாடு ஆகியவை பற்றி விளக்கும் பிரசுரங்களும் விநியோகிக்கப்படும்.

இந்த பாதயாத்திரையை முன்னிட்டு பல இடங்களில் பொதுக்கூட்டங்களும் விழாக்களும் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளன.

அந்தக் கூட்டத்தில் "அமெரிக்காவின் விண்வெளி யுத்தக் கொடுமை" அணு ஆயுத தயாரிப்பு ஆகியவற்றின் கொடுமையைப் பற்றி பல இடங்களில் மக்களுக்கு எடுத்துக் கூறப்படும்.

இந்த விபரங்களை செய்தியாளர்களிடம் இந்திய சோவியத் கலாச்சார கழக தலைவர் என், டி. சுந்தரவடிவேலுவும், பொதுச் செயலாளர் என். டி. வானமாமலையும் தெரிவித்தனர்.

இதை முன்னிட்டு வரும் அக்டோபர் 23-ந் தேதி சென்னையில் மாபெரும் பேரணி நடக்க இருப்பதாகவும் உலக சமாதான பேரவைத்தலைவர் ரமேஷ் சந்திரா என்பவர் கலந்து கொள்வார் என்றும் அவர்கள்தெரிவித்தனர்.

---

## அண்ணா மாவட்ட கலெக்டர்

மதுரை, செப். 10— திண்டுக்கல்லைத் தலைநகராகக் கொண்டு வரும் 15ந் தேதி முதல் புதிதாக துவங்க இருக்கும் அண்ணா மாவட்ட அமைப்பு பணிகளை தற்போது மாதவன் நம்பியார் கவனித்து வருகிறார்.

இப்போது அண்ணா மாவட்ட கலெக்டராக மாதவன் நம்பியாரை நியமித்து ஆளுநர் குரானா உத்தரவிட்டுள்ளார்.

## அமைச்சர் நிகழ்ச்சிகள்

**டாக்டர் நாவலர்**

செப்டம்பர்—11 செங்கற்பட்டு

செப்—12 திண்டுக்கல்

செப்டம்பர்-13 சென்னை

**ப. உ. ச.**

செப் 10 திருவண்ணாமலை

11 வேட்டவலம், செங்கம்

12 திருவண்ணாமலை

## தென்னவன் லதாகலைக்குழு நிகழ்ச்சிகள்

செப் 13, 14 மதுக்கூர்

15 தஞ்சை

16 ஆத்தூர்

17 திண்டுக்கல்

18 மன்னார்குடி

முகவரி:

தென்னவன் லதா கலைக்குழு

நெய்வார் மானாங்கோரை தஞ்சை.

## சத்திரபட்டியில் காளிமுத்து பங்கேற்கும் விழா

விருதுநகர் செப். 10— காமராஜர் மாவட்டம் சத்திரப்பட்டி அரசு மேல் நிலைப்பள்ளியில் நாளை (11ந் தேதி) மாலை 4 மணிக்கு பெற்றோர்—ஆசிரியர் சங்க விழா நடக்கிறது. மாவட்ட ஆட்சித்தலைவர் விஜயராகவன் தலைமை தாங்குகிறார் அமைச்சர் காளிமுத்து விழாவில் பேசுகிறார் ச. சுப்பு எம்.எல்.சி. பாலகிருஷ்ணன் எம்.எல்.ஏ. இராமன் எம். எல். ஏ., ஆகியோர் பேசுகிறார்கள்.

# மத்திய-மாநில உறவு: அமைச்சரவை உட்குழு விவாதம்

சென்னை, செப். 10— மத்திய அரசு— மாநில அரசு உறவு குறித்து அமைச்சரவை உட்குழு நேற்று விவாதித்தது,

நிதி அமைச்சர் டாக்டர் நாவலர் தலைமையில் இந்த ஆலோசனை நடந்தது.

மத்திய மாநில அரசுகள் உறவு பற்றி ஆராய மத்திய அரசு நீதிபதி சர்க்காரியாவை நியமித்துள்ளது.

சர்க்காரியா கமிஷனுக்கு தாக்கல் செய்யவேண்டிய அறிக்கை குறித்து ஆராய தமிழக அரசு நீதிபதி ராமபிரசாத் ராவ் கமிஷனை நியமித்தது. அதன் அறிக்கையை அரசுக்கு தாக்கல் செய்துள்ளது.

அந்த அறிக்கையை ஆராய்ந்து அதிக அதிகாரம் பெறும் அறிக்கையைதாக்கல்செய்ய டாக்டர் நாவலர் தலைமையில் அமைச்சரவை உட்குழு நியமிக்கப்பட்டுள்ளது.

அந்தக்குழு நேற்று கூடியது அறிக்கைபற்றிஆராய்ந்தது.

அமைச்சரவை உட்குழு அறிக்கை தயாரித்து முதல்வர் புரட்சித் தலைவரிடம் அளிக்கும். அதன் பிறகு அந்தஅறிக்கை அமைச்சரவைக் கூட்டத்தில் வைக்கப்படும்.

அதன் பிறகு அதை சர்க்காரியா கமிஷனிடம் தமிழக அரசு சார்பில் முதல்வர் அளிப்பார்.

சர்க்காரியா கமிஷன் நவம்பர் மாதத்தில் தமிழகம் வரும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

## திருமணம்

சினிமா சோலை ஆசிரியர் அதிவீர பாண்டியனுக்கும், ராமலிங்கத்தின் மகள் அனுசூயாவிற்கும் வரும் 11ந் தேதி காலை கோடம்பாக்கம் எம். கே. ஜி. திருமண மண்டபத்தில் அமைச்சர் காளிமுத்து தலைமையில் சட்டமன்ற உறுப்பினர் முசிறிபுத்தன், மேலவை உறுப்பினர் ஜேப்பியார் ஆகியோர் முன்னிலையில் திருமணம் நடைபெற்றது.

## அறிவுடைநம்பி நிகழ்ச்சிகள்

செப். 11— காஞ்சிபுரம்; 12— திருச்சி, 13—திருநெல்வேலி, 14— குமரி.

**முகவரி**

கவிஞர்: உதயகுமார்
மன்னை சாலை,
திருத்துறை பூண்டி.
614713

---

## வனத்துறை

ஓசூர் கோட்டம்

## ஏல அறிக்கை

1985 – 86—ம் வருடத்தில் ஓசூர் வனக்கோட்டத்தின் புளி மகசூல் யூனிட்டுகளின் ஏலம் 1985—ம் ஆண்டு செப்டம்பர் மாதம் 23—ம் நாள்திங்கட் கிழமை காலை 11.00 மணிக்கு ஓசூர் கால் நடை பண்ணைக்கருகிலுள்ள ஓசூர் மாவட்ட வன அலுவலகத்தில் நடைபெறும், தேவையான விபரங்களைக் கீழ்க் கையொப்பமிட்ட அலுவலரிடமிருந்தோ அல்லது கிருஷ்ணகிரி, ஓசூர், தேன் கனிக்கோட்டை மற்றும் அஞ்செட்டி வனச்சரகர்களிடமிருந்தோ பெற்றுக் கொள்ளலாம்.

மாவட்ட வன அலுவலர்
(பொறுப்பு)

அலுவலக தொலைபேசி
எண்: 2259.
ஓசூர் கால்நடைப்பண்ணை
10.7.1985.

DIPR/32934/85-13/SAS

---

செல்வி
# ஜெயலலிதா எம். பி.
அவர்களை
அனைத்திந்திய
அண்ணா தி. மு. கழக
கொள்கை பரப்புச்
செயலாளராக நியமித்தமைக்கு

இதயதெய்வம் தமிழக முதல்வர்
# டாக்டர் புரட்சித்தலைவரின்

பொற்பாதங்களை வணங்கி எங்கள்
நன்றியை காணிக்கையாக்குகிறோம்

| | | |
|---|---|---|
| K. R. துரைசாமி, ஒன்றிய துணை செயலாளர் | M. சுப்பிரமணி, ஒன்றிய அவைத் தலைவர் | M. மூர்த்தி ஒன்றிய பொருளாளர் |
| M.ராஜமாணிக்கம் மாவட்டபிரதிநிதி | K. பழனிச்சாமி (முன்னாள்ஒன்றிய அமைப்பாளர்) | K. பழனியப்பன் தாளியாபட்டி செயலாளர் |
| M K. பழனியப்பன் மூலக்காட்டானூர் செயலாளர் | P. ஆறுமுகம் முத்துக்கவுண்டன் புதூர்செயலாளர் | K. ஜெயக்குமார் பொன்னுசாமி டிபன் ஸ்டால் கரூர் |

இங்ஙனம்

தாந்தோணி ஒன்றியக் கழகம்
திருச்சி மாவட்டம்

Edited and Published by A. RAVINDRAN ... Publications and Printed by All India Anna D. M. K. Perarignar Anna ... Press at 34, Nelson Manickam Road, MADRAS—600 029.

# தமிழர்கள் இலங்கையில் கவுரவமாக வாழ்வதற்கு மத்திய அரசு முயற்சி

## ராம்நிவாஸ் மிர்தா தகவல்

சென்னை, செப். 9— இலங்கைப் பிரச்சினையில் சுமுக முடிவு ஏற்பட்டு இந்தியா வந்துள்ள தமிழ் மக்கள்' கவுரவத்துடன் திரும்பிச் சென்று பாதுகாப்புடன் வாழவேண்டும் இதற்கு திம்பு பேச்சு வார்த்தை மீண்டும் தொடங்குதல் வேண்டும் என்று மத்திய அமைச்சர் ராம் நிவாஸ் மிர்தா தெரிவித்தார்.

சென்னை ராஜஸ்தானியர் சங்கம் நடத்திய தமிழ்நாடு மார்வாரி சம்மேளனத்தின் தொடக்க விழாவுக்கு மத்திய அமைச்சர் ராம்நிவாஸ் மிர்தா தலைமைவகித்தார். ஆளுநர் குரானா நிகழ்ச்சிகளை தொடங்கி வைத்தார்.

விழாவில் அமைச்சர்கள் ராசாராம், டாக்டர் அண்டே, குடிநீர் வாரியத் தலைவர் ஹுக்கும்சந்த் மற்றும் பாலகிருஷ்ணகோயங்கா, சாந்திலால் ஜெயின், அரிகோபால், அகர்வால் சாயர்சந்த் நஹா மற்றும் பலர்பேசினர்.

மத்திய அமைச்சர் ராம் நிவாஸ் மிர்தா பேசுகையில் கூறிதாவது:—

மார்வாரி சமூகத்தினர் தங்களுக்குள் சமூக சீர்திருத்தத்தை ஏற்படுத்துவதில் கவனம் செலுத்த வேண்டும்.

### வரதட்சணை ஒழிப்பு

குறிப்பாக பெண்களுக்கு பர்தா முறை நீக்கம், வரதட்சணை ஒழிப்பு, ஆடம்பரத் திருமணம் சடங்குகளைக் குறைத்தல் முதலானவற்றில் கவனம் செலுத்த வேண்டும்.

இலங்கையின் இனப் பிரச்சினையால் அங்கு நடைபெறுகின்ற துயர நிகழ்ச்சியால் தமிழக மக்கள் மட்டுமல்லாமல் நாடு முழுவதும் உள்ள அனைத்து மக்களும் மிகுந்த மனவேதனை அடைந்துள்ளனர்.

இலங்கையின் இனப்பிரச்சினை உள்நாட்டு பிரச்சினையே என்றாலும், இலங்கைத் தமிழ் மக்கள் கவுரவத்துடன் திரும்பிச் சென்று வாழவேண்டும்.

இதற்கு இந்தியா முயலும். அத்தகைய கவுரவமான தீர்வு ஏற்படுவதற்கானமுயற்சியே திம்பு பேச்சுக்கள், இப்பேச்சுகள் மீண்டும் தொடங்கி வெற்றி பெறவேண்டும்.

இவ்வாறு மத்திய அமைச்சர் ராம்நிவாஸ்மிர்தா கூறினார்.

தமிழக தொழில் அமைச்சர் ராசாராம் பேசுகையில் கூறியதாவது:-

இந்த விழாவை இந்திய ஒருமைப்பாடு விழாவாகக் கருதுகிறேன். தொழில் வளப்பெருக்கத்துடன் நல்ல சூழல் பிரதமரால் உருவாக்கப்பட்டுள்ளது.

### வேலை வாய்ப்பு

இக்காலத்தைபயன்படுத்தி கொண்டு தமிழ்நாட்டில் புதிய தொழில்களில் முதலீடு செய்வதன் மூலம், மக்களுக்கு வேலைவாய்ப்புகளை அதிகரிக்க மார்வாரி சமூகத்தினர் முன்வரவேண்டும்.

தமிழ்நாட்டில் தொழில்களில் பின்தங்கியுள்ள பகுதிகளில் 21 பகுதிகளைத் தேர்ந்தெடுத்து, அவற்றில் தொழில்தொடங்குபவர்களுக்கு தமிழகம் தருகிற 10 சதவீத மான்யம், மத்திய அரசு தரும் 25 சதவிகித மான்யம் ஆகியவற்றை கிடைக்கச் செய்வதற்கான ஒரு திட்டத்தையும் அந்த 21 பகுதிகள் எவை என்பதையும் தமிழக அரசு விரைவில் அறிவிக்க இருக்கிறது. இதனை மார்வாரி சமூகத்தினர் பயன்படுத்திக் கொள்ள வேண்டும்.

இவ்வாறு அமைச்சர் ராசாராம் கூறினார்.

# கோபியில் மாணவர் அணி கூட்டம்

கோபி செப். 10— கோபி பயணியர் விடுதியில் கழக மாணவர் அணி செயற்குழுக் கூட்டம் நடைபெற்றது. கூட்டத்திற்கு பெரியார் மாவட்ட பால்வள ஒன்றியத் தலைவரும் மாணவர் அணித் தலைவருமான டி.வள்ளல் தலைமை வகித்தார். கூட்டத்தில் கள்ளிப்பட்டி மணி மற்றும் கழகமாணவர் அணியினர் கலந்து கொண்டனர்.

கூட்டத்தில் சேலம் மாணவர் பயிற்சி முகாமில் கலந்து கொண்டு சிறப்பிக்கவும் பேரறிஞர் அண்ணா பிறந்தநாளை மிகச் சிறப் [illegible] டவும்முடிவு செய்யப்பட்டது

# ராணுவத்தை அடக்கு இலங்கைக்கு பிரதமர் ராஜீவ் கோரிக்கை

புதுடெல்லி, செப். 10- தமிழர்களை கொன்று குவித்து வரும் ராணுவத்தைஇலங்கை அரசாங்கம் அடக்கி வைக்கவேண்டும்என்று பிரதமர் ராஜீவ் கோரிக்கை விடுத்தார்.

இந்தியா முழுவதிலுமிருந்து வெளியாகும் பிராந்திய மொழி மற்றும் ஆங்கில பத்திரிகை ஆசிரியர்களை பிரதமர் ராஜீவ் டெல்லியில் 1 மணி நேரம் சந்தித்துப் பேசினார்.

அப்போது பிரதமர் ராஜீவ் கூறியதாவது:

இலங்கையில் இப்போதுள்ள நிலைமை மிகவும் மோசமாக உள்ளது. இலங்கை ராணுவம் தமிழர்களை கொன்று குவிக்கிறது, ராணுவத்தை இலங்கை அரசாங்கம் தனது கட்டுப்பாட்டின் கீழ் கொண்டு வரவேண்டும் ராணுவத்தை அடக்கி தனது மதிப்பை நிலை நாட்ட வேண்டும்.

### பரிகாரம்

இலங்கையில் நடைபெறும் இனக் கலவரத்தை முடிவுக்கு கொண்டு வரவும், தமிழர்கள் பிரச்சினைக்கு தீர்வு காணவும் விடுதலை புலிகள் இயக்கமும் இலங்கை அரசாங்கமும் ஆர்வம் காட்டி நிர்வாகத் திறமையை வெளிப்படுத்த வேண்டும்.

இலங்கைத் தமிழர்களின் பிரச்சினைக்கு பரிகாரம் காண, தமிழ் நாட்டில் உள்ள சிலர் நியாயமான எல்லையைத் தாண்டி சில யோசனைகளை தெரிவித்துள்ளனர்.

இலங்கை தமிழர்களில் ஒரு பகுதியினரின் நியாயமான கோரிக்கைகளையும் மீறி இவர்கள் தெரிவிக்கும் யோசனைகள் அமைந்துள்ளன.

இவ்வாறு பிரதமர் ராஜீவ் கூறினார்

பஞ்சாப் பிரச்சினை குறித்து, பிரதமர் கூறுகையில் ஜனநாயக மரபுகளின் மூலமே தீவிரவாத பிரச்சினைக்கு தீர்வுகாண முடியும் அந்த வகையில்பஞ்சாப மாநிலத்தில் தேர்தல் மூலம் நிலையான அரசை அமைக்க முடியும் என்று காங்கிரஸ் ஆட்சி நம்பிக்கையுடன் இருக்கிறது என்று தெரிவித்தார்.

மேலும் அவர் கூறியதாவது:-

தீவிரவாதிகளுக்கு பாகிஸ்தானில் பயிற்சி அளிக்கப்படுவதாக நமக்கு வந்த தகவல்களை அடுத்து இந்திய பாகிஸ்தான் எல்லை தற்காலிகமாக மூடப்பட்டுவிட்டது.

### கறுப்புபணம் ஒழிப்பு

கறுப்பு பணத்தை ஒழிக்க அரசு தீவிர நடவடிக்கை எடுக்கும் 7வது ஐந்தாண்டு திட்ட காலத்தில் மின் உற்பத்திக்கு முக்கியத்துவம் கொடுக்கட்படும்.

அசாம் மாநிலத்தில்விரைவில் தேர்தலை நடத்த மத்திய அரசு விரும்புகிறது.

இவ்வாறு பிரதமர்ராஜீவ் காந்தி கூறினார்.

# இலங்கைதமிழர்பிரசனை: புதிய திட்டம் பற்றி வாக்கெடுப்பு இல்லை

## ஜெயவர்த்தனே பேச்சு

கொழும்பு, செப். 10— இலங்கைத் தமிழர் பிரச்சினை குறித்து ஏற்றுக் கொள்ளப்படும் புதியதிட்டம் பற்றி இலங்கையில் வாக்கெடுப்பு எதுவும் நட்த்துவதற்கில்லை என்று ஜனாதிபதி ஜெயவர்த்தனே கூறினார்.

இலங்கைத் தமிழர் பிரச்சினை குறித்து இலங்கை அரசுக்கும் தமிழ் ஈழ விடுதலை இயக்கத்தினருக்கும் இடையே ஏற்பட்ட சமரச பேச்சு வார்த்தை முறிவடைந்ததைத் தொடர்ந்து இந்திய அரசு புதிய திட்டம் ஒன்றை தயாரித்துள்ளது

### ஆலோசனை

இநதத் திட்டம் பற்றி இலங்கை ஜனாதிபதி ஜெயவர்த்தனே தனதுஅமைச்சர்களுடன் ஆலோசனை நடத்தி வருகிறார்.

நேற்று அவர் கொழும்பில் புத்தமதத் தலைவர்களிடையே பேசினார். அப்போது அவர் கூறியதாவது:

இலங்கையில் தமிழர் பிரச்சினையை விரைவில் தீர்ப்பதற்கு இலங்கை தயாராக இருக்கிறது. மீண்டும் நடக்க வருக்கும் பேச்சு வார்த்தையில் சுமுகமான தீர்வு காண்பதை இலங்கை வரவேற்கிறது.

எத்தகைய முடிவு ஏற்பட்டு புதிய திட்டம் கொண்டு வரப்பட்டாலும் அது பற்றி மந்திரிசபை ஆலோசனை நடத்தும். பின்னர் அந்தத்திட்டம் குறித்து பார்லிமெண்ட் கூட்டத்தில் விவாதிக்கப்படும் திட்டம் எந்தெந்த முறையில் செயல்படுத்தப்படும் என்பதையும் பார்லிமெண்ட் முடிவு செய்யும்.

புதிய திட்டம் குறித்து இலங்கை மக்களிடையே வாக்கெடுப்புஒன்றைநடத்தி கருத்தறியும் திட்டம் ஏதுவும் இல்லை. பார்லிமெண்ட்டில்மசோதா கொண்டுவரப்பட்டு சட்டமாக நிறைவேற்றப்படும்.

வன்முறை சம்பவங்களை தொடர்ந்து தங்கள் வீடுகளை விட்டு வெளியே சென்றவர்கள் அனைவரும் அவர்களது இருப்பிடத்துக்கு திரும்புமாறு கேட்டுக் கொள்கிறேன். மீண்டும் அவர்கள் மாமூல் வாழ்க்கையை தொடங்கிய பின்னர்தான் எத்தகைய புதிய திட்டமும் அமலாக்கப்படும்.

### மாநில கவுன்சில்

எப்படிபபட்ட அதிகாரங்களை அமைச்சர்களுக்கு ஒதுக்குவது அல்லது இலாக்காக்கள் ஒப்படைப்பது என்பது பற்றி மந்திரிகள் கூட்டத்தில் முடிவு செய்யப்படும்.

புதியதாகஅமைக்கப்படும் மாநிலகவுன்சில்களுக்கு எத்தகைய அதிகாரம் வழங்குவது என்பது பற்றியும் ஆலோசித்து முடிவுசெய்யப்படும்.

இவ்வாறு ஜனாதிபதி ஜெயவர்த்தனே கூறினார்.

# குழந்தைத் தொழிலாளர்கள்: அரசு அதிகாரிகள் ஆய்வு

சிவகாசி, செப் 10— காமராஜர் மாவட்டம் சிவகாசியில் உள்ள தொழிற்சாலைகளில் குழந்தைகள் அதிக அளவில் பணிபுரிவதை நேரில் பார்வையிட புதுடெல்லியிலிருந்து இந்திய அரசின் தொழிலாளர் நல செயலாளர் பாடிங்கர், இணைச் செயலாளர் அசோக் நாராயண், தமிழ்நாடு அரசின் தொழிலாளர் நலச் செயலாளர் பால்ராஜ், ஆகியோர் சிவகாசிக்கு வருகைதந்தார்கள். இவர்களை மாவட்ட கலெக்டர் எல்.என். ஜயராகவன், கோட்டாட்சியர் இராமலிங்கம், தாசில்தார் கிருஷ்ணசாமி, மற்றும் உதவி மக்கள் தொடர்பு அதிகாரி இராவணன் ஆகியோர் வரவேற்றார்கள்.

சிவகாசியில் உள்ள பராசக்தி பயர் ஒர்க்ஸ் மார்ட் மேட்ச் இண்டஸ்ட்ரீஸ், ஸ்ரீ துர்கா மேட்ச் ஒர்க்ஸ், சுப்புராஜ் மேட்ச் ஒர்க்ஸ், ஆகிய இடங்களைப் பார்வையிட்டார்கள். இங்கு பணிபுரியும் 5 வயதுக்கு மேற்பட்ட குழந்தைகளிடம் அவர்களது பணி, ஊதியம் வேலை நேரம் குறித்து பாடிங்கரும் பால்ராஜ், விஜயராகவன் ஆகியோரும் கேட்டறிந்தார்கள். சில இடங்களில் குடிதண்ணீர் வசதி செய்யப்படாமல் இருந்ததைக் கண்ட அதிகாரிகள். தண்ணீர் வசதி செய்து வைக்கும்படி கூறினார்கள், குழந்தை தொழிலாளர்களுக்கென நடத்தப்படும் முறைசாராபள்ளிக் கல்வித் திட்டத்தையும் பார்வையிட்டார்கள். சிவகாசி நகரில் பொதுமக்களின் குடிதண்ணீர்பிரச்னையைத் தீர்க்க போடப்பட்டுள்ள அடிக்குழாய்களையும் அவர்கள் பார்வையிட்டார்கள்.

### பிறப்பு

பூம்புகார் தமிழ்நாடு கைத்திறன் வளர்ச்சி இணையக அண்ணா பணியாளர் சங்க பொதுச்செயலாளர் சந்தியப்பன், பங்கவள்ளி தம்பதியருக்கு கடந்த 5ந் தேதி கஸ்தூரிபாய்காந்தி மருத்துவமனையில் ஆண் குழந்தை பிறந்தது. தாயும் சேயும் நலமாக உள்ளனர்.

# புகை பிடிக்கும் பழக்கம் 30 நிமிடத்தில் ஓட்டம்: ரஷ்யாவின் புது சிகிச்சை

பெல்கிரேடு, செப். 10- புகைப்பிடிக்கும் பழக்கத்தை குறைந்த பட்சம் 30 நிமிடத்தில் அறவே ஒழித்துக் கட்டுவதற்கு ரஷ்ய டாக்டர் ஒருவர் ஒரு புதிய சிகிச்சை முறையைக்கண்டு பிடித்துள்ளார்.

உலகநாடுகளில்கோடிக்கணக்கான மக்கள் இன்று புகை பிடிக்கும் பழக்கத்துக்கு ஆளாகி உள்ளனர்,

சிகிரெட். சுருட்டு, பீடி மற்றும் கஞ்சாமுதலியபுகை பிடிக்கும் பழக்கத்தால் இளைஞர்களும் பெரும் அளவில்பாதிக்கப்பட்டுள்ளனர்,

இந்தக் கொடிய பழக்கத்தை மாற்றுவதற்குமருத்துவ நிபுணர்கள் பல்வேறு சிகிச்சை முறைகளை பயன்படுத்தி வருகிறார்கள்

மனோதத்துவ ரீதியிலும் புகை பிடிக்கும் பழக்கம் அகற்றப்படுகிறது.

இப்போது ரஷ்யடாக்டர் ஒருவர் சுமார் 30 நிமிடம் முதல் 60 நிமிடத்துக்குள் இந்தப் பழக்கத்தை ஒழித்துக் கட்டும் சிகிச்சை முறையைக் கண்டு பிடித்துள்ளார்

ஊசிகளால்உடலில் குத்தி சிகிச்சை அளிக்கும் ''அக்குபங்க்சர்'' முறை மூலம் இந்த பழக்கத்தை அவர் விரட்டி அடிக்கிறார் ரஷ்யாவைச்சேர்ந்த அந்த டாக்டரின் பெயர் இகார் பிரெய்க்கோ

புகைப்பிடிக்கும் பழக்கத்துக்கு அடிமையாகியுள்ள நோயாளிகளுக்கு அவர் அளிக்கும் சிகிச்சை இது தான்

நோயாளிகளின் காதுகளில் ஊசியால் குத்துகிறார் பல்வேறு ஊசிகளை வைத்துக்கொண்டு காதோரங்களில் பலமுறை ஊசிகளை குத்திசிறிது நேரம் அப்படியே விட்டு வைக்கிறார். இதனால் காதில் எரிச்சல் ஏற்படுகிறது எரிச்சல் அடங்கியதும் ஊசிகளை எடுத்து விடுகிறார்.

சிகிச்சையும் முடிந்து விட்டது. இந்த சிகிச்சைக்கு அவர் எடுத்துக் கொண்ட நேரம் சுமார் 30 முதல்60 நிமிடம்தான் சிகிச்சை முடிந்ததும் நோயாளிகள் தெளிவான மனதுடன் செல்லுகிறார்கள் அவர்கள் பின்னர் புகை பிடிக்கும் பழக்கத்தையே விட்டுவிடுகிறார்கள்.

சுமார் ஆயிரத்து 500 பேருக்கு இந்த முறையில் சிகிச்சை அளிக்கப்பட்டதில் அவர்களில் 94 சதவிகிதத்தினர் சுகம் அடைந்துள்ளனர் புகை பிடிக்கும் பழக்கத்தை அவர்கள் விட்டுவிட்டனர்

யூகோஸ்லேவியா நாட்டில் இருந்து வெளிவரும் 'போரபா' என்றபத்திரிகை இத்தகவல்களை வெளியிட்டுள்ளது

# பஞ்சாப் ரயிலைத் தகர்க்க சதி: 6 சீக்கியர்கள் கைது

புதுடெல்லி, செப். 10— பஞ்சாப் எக்ஸ்பிரஸ் ரயிலை வெடி வைத்து தகர்க்க, சதி செய்ததாக 6 சீக்கியர்களை போலீசார் கைது செய்தனர்.

டெல்லியிலிருந்து பஞ்சாப் செல்லும் எக்ஸ்பிரஸ் ரயிலை வெடிகுண்டு வைத்து, தகர்க்க சீக்கிய பயங்கரவாதிகள் முயற்சி செய்தனர். இது உடனடியாக போலீசாருக்கு தெரிய வந்தது. இதையொட்டி சீக்கிய பயங்கரவாதிகளை போலீசார் கைது செய்தனர்.

கைதானவர்களில்டெல்லி பல்கலைக்கழக பேராசிரியர் ஹர்மீத்சிங் என்பவரும் ஒருவர் ஆவார். இவர் தான் இந்த ரயில் தகர்ப்பிற்கு வேண்டிய பணத்தை ஏற்பாடு செய்ததாக விசாரணையில் தெரியவந்துள்ளது.

மேலும், அர்ஜுன்சிங்கையும் அவரது பாதுகாவலரையும் சுட்டது இவர்கள் தானா என்பது பற்றியும் விசாரணை நடந்து வருகிறது. டெல்லியில் கடந்த மேமாதம் டிரான்சிஸ்டர் வெடிகுண்டுசம்பவங்களுக்கு இவர்களே காரணம் என்று தெரிய வந்துள்ளது.

டிரான்சிஸ்டர் வெடிகுண்டுசம்பவத்தையொட்டி கைது செய்யப்பட்டு. டெல்லி காவல் நிலையத்தில் சயனைடு சாப்பிட்டு இறந்த சீக்கியரும் இவர்களுடைய நண்பர் என்று விசாரணையில் தெரிய வந்துள்ளது.

கைது செய்யப்பட்ட 6 சீக்கியதீவிரவாதிகளும் டெல்லி மெட்ரோபாலிடின் நீதிபதி முன்பு ஆஜர் செய்யப்பட்டனர். அவர்களை காவலில் வைக்குமாறு நீதிபதி உத்தரவிட்டார்.

# ஜெயவர்த்தனேயை சந்திக்க ராஜீவ் தூதர் கொழும்பு விரைகிறார்

புதுடெல்லி, செப். 10— ஈழத்தமிழர்கள் படுகொலை செய்யப்படுவதை தடுக்க இலங்கை அதிபர் ஜெயவர்த்தனேயைச் சந்திப்பதற்காக பிரதமர் ராஜீவின் தூதராக பண்டாரி இலங்கை செல்கிறார்.

இலங்கைத் தமிழர் பிரச்சினைக்கு விரைவில் தீர்வு காண சரியான நடவடிக்கைகளை இந்திய அரசு தீவிரமாக எடுத்து வருகிறது.

பூடான் தலைநகர் திம்புவில் நடைபெற்ற 2வது சுற்று பேச்சு வார்த்தை முறிந்ததைத் தொடர்ந்து மீண்டும் இலங்கை அரசுக்கும் தமிழ் ஈழ விடுதலை இயக்கத்தினருக்கும் இடையே சமரச பேச்சு வார்த்தை நடைபெறுவதில் பிரதமர் ராஜீவ்காந்தி மிகுந்த கவனம் செலுத்தி வருகிறார்.

புதுடெல்லியில் உள்ள இலங்கை தூதர்பெர்னார்டு திலகரத்னேவும் கொழும்பு வந்துள்ளார். ஜனாதிபதி ஜெயவர்த்தனேயை சந்தித்துப் பேசினார். இலங்கைதமிழர் பிரச்சினை பற்றிய விசேஷ தகவல்களை அவர் டெல்லிக்கு எடுத்துச் செல்வார் என்றும் தெரிகிறது.

ஜனாதிபதி ஜெயவர்த்தனேயின் விசேஷ செய்தியை அவர் பிரதமரிடம் சேர்ப்பிப்பார்.

# சிறுசேமிப்பு சங்கத் தலைவர் நிகழ்ச்சிகள்

செப். 11 — 12— குப்பகோணம்



நாளை (11-9-85) கலைவாணர் அரங்கில் நடைபெறும்

அமைச்சர் வீராசாமி இல்லத் திருமண விழாவிற்கு வருகைதரும்

●●● ★★★ ●●● ★★★ இதய தெய்வம் ●●● ★★★ ●●● ★★★

மாண்புமிகு தமிழக முதல்வர்

# டாக்டர் புரட்சித்தலைவர்

அவர்களை வருக! வருக!! என வரவேற்கிறோம்


மலர்க்கொடி


சண்முகம் B.A. B.L.d.,


கலியமூர்த்தி B.Sc.,M.A.


சியாமளா B.Sc.,


விஜயகுமாரி B.S.,


பன்னீர்செல்வம் M.A.,

★★★★★★★★★★★★★★★★★★★★★★★ இவண் ★★★★★★★★★★★★★★★★★★★★★★★

**என். சீனிவாசன்**
அவைத் தலைவர், ஒரத்தநாடு ஒன்றியம்

**சின்னதுரை**
ஒன்றிய செயலாளர், ஒரத்தநாடு

**எஸ். பாலகிருஷ்ணன்**
துணை செயலாளர், நீடாமங்கலம் ஒன்றியம்

**தாஜுதீன்**
பொருளாளர், நீடாமங்கலம்

**ஜாபர் உசேன்**
நகர செயலாளர், நீடாமங்கலம்

**என். குப்புசாமி**
மாவட்ட பிரதிநிதி, நீடாமங்கலம் ஒன்றியம்

**சி. துரைராசன்**
கழக தலைமைப் பிரதிநிதி, ஒரத்தநாடு புதூர், ஒரத்தநாடு ஒன்றியம்.

**எஸ். பூசைக்கண்ணு**
செயலாளர், அம்பலப்பட்டு, வடக்கு

**பட்டு என்கிற கந்தசாமி**
ஒன்றியதுணைச் செயலாளர், திருவோணம்

**சிவவிடுதி கோவிந்தராஜன்**
முன்னாள் ஒன்றிய, துணைப் பெருந்தலைவர், திருவோணம்,

**ஆழி. கு. மகாலிங்கம்**
மாவட்டப் பிரதிநிதி, ஒரத்தநாடு, ஒன்றியம்,

**தஞ்சை இரா. சாமிநாதன்**
மாவட்டச் செயலாளர், மேலதஞ்சை,









## இந்திய தேசிய ஆவணக் காப்பகம் ஆவணக் காப்பக கல்விக் கூடம்

கையெழுத்துப் பிரதிகள், ஆவணங்கள் ஆகியவற்றை பராமரிப்பதற்கும் பாதுகாப்பதற்குமான எட்டு வார கால சர்டிபிகேட் வகுப்பு.

ஆவணக் காப்பக கல்வி பற்றிய கல்வி. இந்திய தேசிய ஆவணக் காப்பகம் நவம்பர் 1985 1-ம் தேதி முதல் நவம்பர் 21-ந் தேதி வரை புத்தகங்கள் கையெழுத்துப் பிரதிகள் ஆவணங்கள், ஆகியவற்றை கவனிப்பதற்கும் பராமரிப்பதற்குமான பதிமூன்றாவது சர்டிபிகேட் கோர்சை நடத்த இருக்கிறது.

ஆவணக் காப்பக அலுவலகங்கள், மியூசியம், கையேட்டு நூலகங்கள், மற்றும் இதுபோன்ற அமைப்புகளில் பயிற்சி பெற்றவர்களுக்கு தங்களது விலை மதிப்பில்லாத கலாச்சாரம், மற்றும் தலைமுறை தலைமுறையாய் வரும் தஸ்தாவேஜுகளை பாதுகாத்திட வகையேற்படுத்துவதே இப்பாடத் திட்டத்தின் நோக்கமாகும். கீழ்கண்டவற்றில் அவர்களை தயார்படுத்தும் பயிற்சியாகும்: (1) விலை மதிப்பில்லாத பொருள்களை நாசப்படுத்துவதை கண்டறிதல் (2) அவற்றை தடுப்பது. பழைய நிலைகளை வைப்பதற்கான முறைகள் (3) முறையாக அலமாரியில் அடுக்கி வைத்தல், தீ தடுப்பு, (4) பத்திரப்படுத்தி அடுக்கிவைத்தல் தீ அணைப்பு ஏற்பாடுகள் முதலியவை (5) நிறுவனங்கள் விலைமதிபற்றதங்கள் துநீண்ட நாளயதஸ்தாவேஜுகளை நீண்டகாலம் பாதுகாத்துவைத்திருப்பதற்காக முன்னெச்சரிக்கை நடவடிக்கைகளை மேற்கொள்வதற்காக நவீன விஞ்ஞான பாதுகாப்பு முறை பழுதுபார்த்து மீண்டும் சீரமைத்தல்.

விண்ணப்பதாரர் சீனியர் செகண்டரி அல்லது இன்டர்மீடியட் அளவில் இரசாயன பாடம் (Chemisry) எடுத்து அங்கிகரிக்கப்பட்ட பல்கலைகழகத்தின் மூலம் குறைந்தபட்சம் 2வது வகுப்பில் தேறிய பட்டதாரியாக இருக்க வேண்டும் 50 வயதுக்குட்பட்டவராக இருத்தல் அவசியம் இந்த பயிற்சிக்கு கட்டணம் ஏதும் கிடையாது ஆனால் இந்தப்பள்ளிக்கு விடுதி (Hostel) வசதி ஏதும் இல்லாததால் தங்கும் வசதி உணவு ஏற்பாடு ஆகியவற்றை விண்ணப்பதாரர்களே செய்து கொள்ளவேண்டும். பயிற்சிக் காலத்தில் விண்ணப்பதாரருக்கு சம்பளம், அலவன்ஸ், ஆகியவற்றை அவற்றை நடத்துகிற நிறுவனங்கள் ஏற்கும்.

பெயர், வயது, கல்வித்தகுதி, இலாகா தங்களது வேலையின் நிலை போன்ற விவரங்களை விண்ணப்பத்தில் குறிப்பிடவேண்டும். அவர்களை வேலையில் அமர்த்தியிருக்கும் நிறுவனம் அவர்களை பரிந்துரைக்க வேண்டும். விண்ணப்பங்கள் 30 9 1985க்கு முன்னதாக The School of Archival Studies, National Archives of India Janpath NewDelhi என்ற முகவரிக்கு கிடைக்கும்படி செய்யவேண்டும். வேலை பார்க்கும் நிறுவனத்தின் தலைவர் மூலம் ஆதரவு தெரிவித்து அனுப்பப்படுகிற விண்ணப்பங்கள் மட்டுமே இந்தப்படிப்பில் சேர்த்துக் கொள்ள பரிசீலிக்கபடும். விண்ணப்பத்தின் மீது, Certificate course in care and Conseruation November 1985 என்று குறிப்பிடப்பட வேண்டும். மேலே குறிப்பிட்ட காலத்திற்கு பின்னால் வரும் விண்ணப்பங்கள் பரிசீலனைக்கு எடுத்து கொள்ளப்படமாட்டாது. இதுபற்றி மேற்கொண்டு எவ்விதமான கடிதப் போக்குவரத்தும் வைத்து கொள்ளபடமாட்டாது.

davp 511/57/85

# வெளிநாட்டு உதவியுடன் இந்தியாவில் நவீன டெலிபோன் தயாரிப்பு

சென்னை, செப் 10— வெளிநாட்டு உதவியுடன் இந்தியாவில் நவீன டெலிபோன்கள் தயாரிக்க ஒப்பந்தம் ஏற்பட்டுள்ளதாக மத்திய அமைச்சர் ராம் நிவாஸ் மிர்தா கூறினார்.

சென்னை கிண்டியில் உள்ள "இந்துஸ்தான் டெலி பிரிண்டர்" நிறுவனத்தில், ரூபாய் 35லட்சம் செலவில் டீசல் மின்சார நிலையம் ("டீசல் பவர் ஹவுஸ்" அமைக்கப்பட்டு உள்ளது.

இதன் திறப்பு விழாவில் மத்திய தகவல் தொடர்புஇலாகாராஜாங்க அமைச்சர் ராம்நிவாஸ் மிர்தா கலந்து கொண்டு, மின்சார நிலையத்தை திறந்து வைத்தார்.

அப்போது அவர் பேசியதாவது:—

மின்சாரம் இல்லாத போது ஏற்படும் பாதிப்பை தவிர்ப்பதற்காக இந்த மின்சார நிலையத்தை நிறுவி இருக்கிறார்கள். இதன் மூலம் பாதிப்பை குறைத்துவிட முடியும்.

### வாழ்த்து

இந்த நிறுவனத்துக்கு இந்த ஆண்டு வெள்ளிவிழா ஆண்டு அதற்காக இந்த நிறுவனத்தாருக்கு வாழ்த்துக்களை தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்த நிறுவனம் இந்த ஆண்டில் எலக்டிரானிக் டெலி பிரிண்டர்களை தயாரித்து வெளியிட இருக்கிறது. பிரான்சு நாட்டு கம்பெனி ஒத்துழைப்புடன் இந்தஎலக்டிரானிக் டெலி பிரிண்டர் தயாரிக்கப்பட இருக்கிறது.

மேலும் மின்சார டைப்ரைட்டர்களும், இந்த நிறுவனத்தில் தயாரிக்கப்பட்டு வருகிறது, இந்த டைப்ரைட்டர் இத்தாலி நாட்டு கம்பெனி ஒத்துழைப்புடன் தயாரிக்கப்படுகிறது.

இவ்வாறு அமைச்சர் மிர்தா பேசினார்

இந்துஸ்தான் டெலிபிரிண்டர் நிறுவனத்தின் தலைவரும் நிர்வாக இயக்குனருமான ஆர். கே பாலிகா வரவேற்று பேசுகையில் கூறியதாவது;—

"1960ம் ஆண்டில் இந்த நிறுவனம் தொடங்கப்பட்டபோது, 1,300 டெலி பிரிண்டர்கள் மட்டுமே தயாரித்தது. இப்போது இந்த நிறுவனம் ஆண்டுக்கு 9 ஆயிரம் டெலி பிரிண்டர்களை தயாரித்து வருகிறது. இதன்மூலம் உற்பத்தி 110 சதவீதம்வளர்ச்சி அடைந்து உள்ளது.

3 சதவீத பாகங்கள் தவிர மீதி உள்ள பாகங்கள் அனைத்தும் உள்நாட்டிலேயே தயாரிக்கப்படுகிறது என்பது பெருமைக்கு உரியதாகும்.

இவ்வாறு ஆர். கே. பாலிகா பேசினார்.

தொழிற்சங்கத் தலைவர் கே. குருமூர்த்தி விழாவில் பேசினார். முடிவில் இந்துஸ்தான் டெலி பிரிண்டர்நிறுவன உற்பத்தி பிரிவு ஜெனரல் மானேஜர் என். ஆர். பஞ்சாபகேசன் நன்றி கூறினார்.

### 13 ஆயிரம் கோடி திட்டம்

விழா முடிந்ததும் அமைச்சர் மிர்தா நிருபர்களுக்கு அளித்த பேட்டியில் கூறியதாவது:

7 வது ஐந்தாண்டு திட்டத்தில் தகவல் தொடர்பு இலாகா 13 ஆயிரம் கோடி ரூபாய்க்கு திட்டங்கள் தயாரித்து உள்ளது. ஆனால் திட்ட கமிஷன் 11 ஆயிரம் கோடி ரூபாய் ஒதுக்கி இருக்கிறது. நிதி வசதியை பொறுத்து திட்ட கமிஷன் தனது இறுதி ஒதுக்கீட்டை அறிவிக்கும்.

தகவல் தொடர்புஇலாகா வெளிநாட்டு தகவல் தொடர்பு நிறுவனங்களுடன் 6 தொழில் நுட்ப ஒத்துழைப்பு உடன்பாட்டில் கையெழுத்திட்டு உள்ளன.

இதில் 3 ஒப்பந்தங்கள் டெலிபோன் கருவிகளை உற்பத்தி செய்யும் ஒப்பந்தங்களாகும்.

இந்தியா ஏற்கனவே பறக்க விட்டு உள்ள "இன்சாட் 1பி" ராக்கெட்டில் உள்ள 4 ஆயிரம் "சேனல்"களும் இந்த ஆண்டு இறுதிக்குள் பயன் படுத்தப்படும்.

இன்னும் சில மாதங்களில் பறக்கவிடப்பட இருக்கும் "இன்சாட் 1சி ராக்கெட்" இப்போது பறந்து கொண்டு இருக்கும் ராக்கெட்டுக்கு உபரியாக வைத்துக் கொள்ளப்படும், அதில் 12ஆயிரம் தகவல் தொடர்பு 'சானல்'கள் இருக்கும்.

இவ்வாறு அமைச்சர் மிர்தா கூறினார்,

### சேப்பாக்கம் எம்.ஜி.ஆர். மன்ற ஆலோசனைக் கூட்டம்

சென்னை, செப். 10. சென்னை சேப்பாக்கப் பகுதி எம்.ஜி.ஆர். மன்றங்கள் சார்பு மன்றங்களின் ஆலோசனைக் கூட்டம் இன்று (10ந் தேதி) மாலை 4 மணிக்கு தலைமைகழகத்தில் நடைபெறுகிறது.

இந்த ஆலோசனைக் கூட்டத்திற்கு சி.வி, ஆட்வழகன் தலைமை வகிக்கிறார், பகுதி செயலாளர் மு. அன்புதம்பி முன்னிலை வகிக்கிறார்.

கூட்டத்தில் அமைச்சர் சவுந்தரராசன், முசிறிப்புத்தன் எம்.எல்.ஏ, கருத்துரை வழங்குகின்றனர். அனைவரும் தவறாது வருகை தருமாறு மாவட்ட மன்றச் செயலாளர் மதுசூதனன் எம்.எல்.சி. கேட்டுக் கொண்டுள்ளார்.

### ஜெமினி தாத்தா ஆனார்

சென்னை, செப். 10— நடிகர் ஜெமினிகணேசன் மகள் ஜி ஜி. தனியார் மருத்துவமனையில் பெண் குழந்தையை ஈன்றெடுத்தார்.

தாயும் சேயும் நலமாக உள்ளனர்.

### கூட்டுறவு பால் சங்க தலைவராக ராசவேலு நியமனம்

கடலூர்; செப். 10— சிதம்பரம் அம்மாபேட்டை கூட்டுறவு பால் வழங்கும் சங்கத் தலைவராக பரங்கிபேட்டைஒன்றிய கழக செயலாளர் ராசவேலு நியமிக்கப்பட்டுள்ளார்.

மற்றும் இயக்குனர்களாக ஜெயராமன், குமார், ஆதிமூலம். சிவசிதம்பரம். கிருஷ்ணமூர்த்தி, பீர்முகமது ஆகியோர் நியமிக்கப்பட்டுள்ளனர்.

# ஸ்ரீ ராமச்சந்திரா கல்வி மற்றும் சுகாதார அறக்கட்டளை சென்னை

அன்புடையீர்.

நிகழும் 1985ம் ஆண்டு செப்டம்பர் திங்கள் 11-ம் நாள் புதன் காலை 9 மணி அளவில் விருகம்பாக்கம் வேம்புலியம்மன் கோவில் தெருவில் அமைந்துள்ள

# ஸ்ரீ ராமச்சந்திரா மருத்துவக் கல்லூரி மற்றும் ஆராய்ச்சி நிலையத்தை


டாக்டர் நாவலர் இரா. நெடுஞ்செழியன்


டாக்டர் எச். வி. ஹண்டே


திருமிகு எஸ். இராமச்சந்திரன்


திருமிகு இராம. வீரப்பன்



மாண்புமிகு தமிழக முதலவர் புரட்சித் தலைவர்

**டாக்டர் எம்.ஜி. இராமச்சந்திரன்** அவர்கள்

அன்புடன் துவக்கி வைக்க இசைந்துள்ளார்கள்

மாண்புமிகு நிதி அமைச்சர்

**டாக்டர் நாவலர் இரா. நெடுஞ்செழியன்** அவர்கள்

தலைமை தாங்க இசைந்துள்ளார்கள்

மாண்புமிகு மக்கள் நல்வாழ்வுத்துறை அமைச்சர்

**டாக்டர் எச். வி. ஹண்டே** அவர்கள்

கல்லூரி சோதனைக் கூடத்தைத் துவக்கி வைப்பார்கள்

மாண்புமிகு மின்துறை அமைச்சர்

**திருமிகு எஸ். இராமச்சந்திரன்** அவர்கள் மற்றும்

மாண்புமிகு சுற்றுலா அறநிலையத் துறை அமைச்சர்

**திருமிகு இராம. வீரப்பன்** அவர்கள்

வாழ்த்துரைகள் வழங்குவார்கள்

அவ்வமயம் தாங்கள் வருகை தந்து விழாவினைச் சிறப்பிக்க அன்புடன் வேண்டுகிறோம்.

இவண்.

**என். பி. வி. ராமசாமி உடையார்**

நிர்வாக அறங்காவலர்

நிகழ்ச்சி நிரல்

| | |
|---|---|
| வரவேற்புரை | : டாக்டர் ஜி. அரங்கசாமி அவர்கள்<br>அறங்காவலர், முன்னாள் துணை வேந்தர், தமிழ்நாடு வேளாண்மைப் பல்கலைக்கழகம். |
| கல்லூரியைத் துவக்கி வைத்தல் | : மாண்புமிகு தமிழக முதல்வர், புரட்சித் தலைவர்<br>டாக்டர் எம். ஜி. ஆர். அவர்கள் |
| நூலகம் திறந்து வைத்தல் | : மாண்புமிகு நிதி அமைச்சர்<br>டாக்டர் நாவலர் இரா. நெடுஞ்செழியன் அவர்கள் |
| சோதனைக்கூடம் துவக்கி வைத்தல் | மாண்புமிகு மக்கள் நல்வாழ்வுத்துறை அமைச்சர்<br>டாக்டர் எச்.வி. ஹண்டே அவர்கள் |
| வாழ்த்துரை | மாண்புமிகு மின்துறை அமைச்சர்<br>திருமிகு எஸ். இராமச்சந்திரன் அவர்கள்<br>மாண்புமிகு சுற்றுலா மற்றும் அறநிலையத்துறை அமைச்சர்<br>திருமிகு இராம. வீரப்பன் அவர்கள் |
| நன்றி நவிலல் | டாக்டர் ஆர். சரத்சந்திரா அவர்கள்<br>கல்லூரி முதல்வர் |
| நாட்டுப்பண் | |





கட்டப்படவிருக்கும் கல்லூரியும் மருத்துவமனையும்





Chhaya/SREHT/624